உ

ஓம்கணபதேநம:

ஸ்ரீ ஞானசம்பந்தசிவாசாரியவரியாயநம:

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

# போற்றிக்கலிவெண்பா.

# திருவூசல்.

இவை

திருப்பெருந்துறை

ஸ்ரீமங் மாணிக்கவாசகசுவாமிகள்

திராவிடவேதபாடசாலைமானேசர்

## ஆ. வேலாயுதபிள்ளை

வேண்டுகோளின்படி

ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணுக்கருளொருவராகிய

காரைக்குடி, ராம. சொ.

## சொக்கலிங்கச்செட்டியாரால்

இயற்றப்பெற்று,

தேவகோட்டை

மீனலோசனிபிரஸில் பதிப்பிக்கப்பெற்றன.

பரிதாவிஷு 1912.

உ

சிவமயம்.

# சென்னை

## வித்வசிரோமணி

## வா. மகாதேவமுதலியாரவர்கள்

## இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

பார்புக்க பெருவளமு நீர்புக்க
நிறைவளமும் பல்கி யென்று
மேர்புக்க வளமலியுந் தாணுட்டு
சோணுட்டி னெல்லா மாழி
யேர்புக்க வஞ்ஞான்று மொருதோணி
யாகிமிசை யிலங்கி நிற்குஞ்
சீர்புக்க சீகாழிச் சிவபாத
விருதயர்தஞ் செல்வச் சேயை. (க)

சேல்காட்டும் விழிகளருட் கால்காட்டு
மைமவதி செப்பார் கொங்கைப்
பால்காட்டு மணிவள்ளம் வாய்மடுத்து
ஞானரசப் பண்பு காணுங்

தால்காட்டுங் கௌணியர்தங் குலக்கொழுந்தைத்
தமிழ்மொழியே தலைமை சாரக்
கால்காட்டு மறையமுத மழைபொழியும்
வான்முகிலைக் கருணைத் தேவை. (உ)

மா * னக்க ரக்கடலிற் கண்வளரு
மாதவனு மரையின் மேவு
நானக்க ருங்குழலி நாயகனுந்
தாமுணரா நாதன் றன்னைத்
தேனக்க கடுக்கைமுடி யுடையானை
விடையானைச் சீர்மை யெண்ணு
வூனக்க ரகம்புகா வொள்ளொளியைக்
கைகாட்டு மொருவன் றன்னை. (ந)

கண்ணுக்கு மருந்தவத்து மாமுனிவ
ரெல்லோருங் கண்டு வப்ப
விண்ணுக்கு மிறைமையுடைத் தேவரெலாம்
வியப்பெய்த விளம்பி நின்ற
பண்ணுக்குத் திருப்பாட லொன்றினாற்
சிவநேசர் பாவை யென்பு
பெண்ணுக்கு பெருந்தகையாந் திருஞான
சம்பந்தப் பிள்ளை தன்னை. (ச)

வாயாரப் பாடுபெரும் பணிபுரிதன்
மனங்கொளீஇ மாட்சி மேவுந்

---

* நக்கரம்—முதலை.

தூயாரெப் போதுமகிழ் தருபிள்ளைக்
கவியொன்று துரிச கன்ற
வாயாரப் பான்மையார் தருபோற்றிக்
கலிவெண்பா வளநூ லொன்று
சேயாருக் *கீனோருக் குவப்புதவு
மூசலொன்று செப்பி னானல். (௫)

திராவிடமா மறையுளிலை மறைகாயிற்
செறிபொருள்கள் சிறந்து தோன்ற
வராவிடமா விடயமது மதித்திடுமோ
முனிவர்புக ழருண்மொ ழித்தேப்
பராவிடமா மகிபுகன்மாக் கதைசெறியு
மரும்பொருள்கள் பரந்து தோன்ற
விராவிடமாண் பொருளனைவையு மற்றவற்று
ளாங்காங்கு விளக்கிட் டானல். (௬)

அன்னவனூர் சீர்பேர்தாம் யாவையெனிற்
றமிழறியு மாறு பாயுந்
தென்னவனு யுமைகேள்வன் றனியரசு
புரிபாண்டிச் செல்வ நாட்டின்
மன்னளகா புரியென்ன மலிசெல்வ
வளம்பெருக்கி வறிஞர்க் கென்று
நன்னயமார் புகலிடமா நவில்காரைக்
குடியாமா னலங்கொ ளூரே. (௭)

* ஈனோர்—இவ்வுலகத்தார்.

ஐந்தான விலக்கணமு மிலக்கியமு
மெய்கண்டா ராதி நால்வர்
சந்தான குரவர்தரு சாத்திரமீ
ரேழுமரி றபக்கற் றன்ன
தந்தான மாணவகர்க் குவப்புறுத
லரன்றுளிற் றணவா வன்பு
பிந்தாத நல்லொழுக்கம் பிறழாத
சிவபூசை பிறங்கு சீரே. (அ)

பண்டாய மறைதேறுப் பரமனடிப்
பத்திமையும் பன்னூற் கல்வி
தண்டாத கேள்வியுமிக் கெப்புலவ
ரொப்பரெனச் சாற்றி மேன்மை
கொண்டாட விருந்தவன்வன் ெறுண்டனெனுங்
குரிசிலுளங் கொளுமா ணுக்கன்
வண்டாடு சீரகத்தார்ச் சொக்கலிங்க
வண்ணலா மன்னும் பேரே. (கூ)

சிறப்புப்பாயிர முற்றிற்று.

உ

கணபதிதுணை.

சிவமயம்.

# ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

## காப்புப்பருவம்.

### விநாயகர்.

திங்களுங் கங்கையும் பொன்றருங் கொன்றையுஞ் செ
ன்னிவைத் *தின்னன்மாற்றிச், சீதளப் பதநீழ லருண்முதற்
பொருளென்று திகழ்வேத வாகமங்க,— ளங்கைநீட் டுபுதன்
னை யேயோதல் கண்கூட தாகவும் விளக்குமெங்க, ளைந்து
கைத் தந்தியைச் சந்ததஞ் சிந்தைவைத் தன்புமிக் கேத்து
கிற்பாஞ்,—செங்கதிர்க் குலசோழர் திருநாடு சீகாழி சிவபாத
விதயமுனிவர், தேவிபக வதியன்னை செய்தவஞ் சீர்பெறச்
சிவனுமா நாப்பணின்பாய்த்,— தங்குசேய் நிகமாக மத்தொ
ளிர் மதாதீத சைவந் தழைப்பமகவாய்த், தரணிவரு திரு
ஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழ்க்கவிக் கருள்கவென்றே. (க)

---

* இன் அல் எனப்பிரித்து இனிப்பிக்கின்ற ஆணவவிருளெனப் பொருள்கொள்க.

## சிவபெருமான்.

*தனதான தனதனன தனதான தனதனன*
*தனதான தனதனன தாத்ததந்த*

சிவபாத விதயர்பக வதியார்செய் தவமுலகு திருவாழ்வு பெறுநிபம தாக்கொள்கின்ற, செயலோர்பு சிவசமய நிலைபேறு தருவலிய திறல்பேணி மகவினுரு வாய்ப்புகுந்தே,— யவமாய பரசமய நெறிகோறல் புரிகெனமு னருடாதை மறைசொல்பர மாத்தனெந்தை, யலர்வாச மனையதிரு வருளேயொர் வனிதையென வமர்வாம னமலபதி சாத்திரஞ்சொ,— லுவமான ரகிதனிய லெவராலு முணர்வரிய வொருவாம லுலகுயிர்ந டாத்தியென்று, முடனுகு சிவனைமுடி மதியோனை நினதிளைய வொருசேயை யுனதுபணி யேற்றுவந்து,— திவள்காழி நகரின்மல ரயன்வாவி தனிலிலகு சிசுவாய மணியைநனி காத்தியென்று, சிறியேமென் மொழிவதுத வியசேய்கள் புரவுபெறு செயன்மேவு முரிமையர்பி தாக்களன்றே. (உ)

## உமாதேவியார்.

*தானதன தானதன தானதன*
*தானதன தனத்ததந்த.*

ஊழியெழு மாழியினும் வாழிசைய காழியினி லுவப்பினென்று, மோதரிய நாதனுட னேதகந லாதரவி னுயிர்க்குலங்கள்,— வாழியவொர் தோணிநனி பேணிமலர் வாணிபதி வளப்பொன்மங்கை, மார்பன்முத லோர்சுணனி யார்வமுட னேர்தினமு மலர்ப்பதங்க,— ளேழிசையி னீடுதுதி பா

டிவழி பாடுசெய விருக்குமம்பை, யேழுலகும் வாழவிரு நா ழியினெ லூழியர ணிடைக்கொணங்கை,— பொழில்சிவ ஞா னவள வாரமுது தானணிமை பொறுத்துநின்று, போதம லர் வாயினுற வேயுதவு சேயைநனி புரக்குமன்றே. (ரு)

## விநாயகர்.

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான.

திருவா ரணத்தின்முத லமர்தார கத்துளுறு தெளி வாய வர்த்தமெது வெனநாடித், திகையாது மிக்கவருண் மத மாமு கத்திநெழி றிகழ்மேனி யிற்றெளிவு பெறவோர்வா,— ஞெருவார ணத்துருவ மதனுல்வி ளக்கியுயி ரொருவாத ளிக் குமிறை யெனநூலொ, டுலகோது நித்தனுறு மிளையோனை யிப்புடவி யுயவேயு தித்துநர ருருவாகி,— வருகாழி யிற்பரமன் விடைமேல டுத்துமையை வளர்பால ளித்தியென மலைநா தன், மகளாத ரத்தொளிர்பொன் வளமீத ருத்தமுத மலர் வாய்ம ணத்தினுடன் வெளிபோத,—வருள்பாசு ரத்தமிழி னுறவேவி ளக்கிமறை யருமாம றைப்பொருள்க டெளிவாக, வருளாள ருய்த்துணர வருள்சேயை யற்பினனி யவனேபு ரப்பனது கடனுமே. (சு)

## சுப்பிரமணியர்.

தனதானனந் தந்த தனதானனந் தந்த தனதான.

திருமாதவன் றந்த விருமாதரின் பங்கொ ளொருநாத, சிவசாமியென் றன்பர் துதிகூறவந் தங்க ணருள்போத,—

பொருசூரன்முன் றுன்று பகையாவும்வென் றுந்து தனிவேல.
புலவோர்கடுன் பொன்னு சிறைநீவியும் பின்செ யனுகூல,—
வருள்வாழ்வினன் றுந்து திருஞானசம் பந்த மனுமூல, மய
ராதுளங் கொண்டு பெரியோர்வணங் குந்தை விகபால,—
வுருவாயெழுந் திம்ப ருறுமேனியுங் கொண்ட வனுநீயி, துன
காவல்கொண் டிங்க ணுளதாகவென் றுஞ்சொல் வதுநாமே.

## திருஞானசம்பந்த மகாமந்திரம்.

*தானனந் தந்ததன தானனந் தந்ததன தாத்ததனன.*

ஈனமண் குண்டரொடு கூடிநின் றுந்திருவெ ணீற்று
நெறியை, யேயிகழ்ந் தும்பெரிய பாதகங் கண்டுமிகு மாற்
கொள்பொழுது,— மீனவன் கொண்டவட வானலந் தண்
புனல தாக்கிநிமிர்பு, மேனிவெம் புந்துயர நாடிமண் டுஞ்ச
மணர் மேற்கொளருமை,— யானமந் த்ரம்பலவு மாவதொன்
றின்றொழிய மேற்செவியினு, ளாகவுந் தும்பொழுதி னேசு
ரந் துஞ்சவருள் கூர்த்தபரம,— ஞானசம் பந்தரெனு நாம
மந் த்ரந்தினமு மேத்தல்புரிது, நாமவன் பைங்குழவி மேனி
கண் டின்புறுத ருட்டுமெனவே. (சு)

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

*தானன தானதன தானன தானதன தனத்ததனனு,*

மாதேவன் வாழ்கயிலை மீதேசி வாநுபவ மதற்கோர்
முடியாய், வாகீச நாமமுடன் வாழ்போதி ராவணனை வதற்கு
ணெகிழா,—வோதோரு பாயமது தீதாமெ னுவமலன் விடு
ப்பகிலமே, லோவாத பேரருளி னுன்மேவு நாவரசை வழுத்

தல்புரிவாம்,— போதாடு மாபொழில்கள் சூழ்கூட னீடமணை யழித்துவரவே, போமாறெ ழாவிரைத னேர்காணு ருமுனது தடுப்பவுடனே,— யீதாவ தோவலபி ளாய்நீயெ னுவுரிமை யிடிக்குமுரையோ, டேபேணு சேயைவளர் சீகாழி வாழ்வை நனி புரக்கவெனவே. (எ)

## ஆலாலசுந்தரமூர்த்திசுவாமிகள்.

தானன தந்தன தானன தாத்தன.

ஙீலால மிந்தர வார்முடி சேர்த்தினன், கேளாகி வந்துக ணுடியி னீற்றுடன்,—மேலாம ணந்திகழ் மாலைக ணீட்டுபு, வீறுய மர்ந்தணி யாய்நிதம் வாழ்த்திடு,—மாலால சுந்தர நாதனை யேத்துது, மாரூறும் விண்டெழு மாதவர் போற்றிய,—தோலாவ ளஞ்செறி காழியின் வாய்ப்புறு, தானான பந்தனை யேநனி காக்கவே. (அ)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

தன்ன தனனதன தன்ன தனனதன தாத்த தனதன.

பொன்னு மணியுநிற மின்னு மரிவிழிகள் போற்று மொருவனைப், புண்ய மதுரைநக ரண்முகுதிரைமிசை பூத்து வெளிவரத்,—துன்னு பகைகடெறு தென்னன் விழிகளெதிர் காட்டி யருளியத், தொன்மை யரசுபணி கொண்ண லினியமணி வாக்கி னடிகளை,—யுன்னி மலர்கமல மன்ன விணையடிகள் வாழ்த்தல் புரிதுமவ், வுண்மை யரசின்வழி பின்னர் வரும்வழுதி பாற்செல் சுரமுடன்,—மன்னு சுருதிபுகல் •வெண்மை கொடுபவமு மாற்றி யருளிய, வண்மை யனையெமது கண்ணின் மணியைநனி காக்க வெனவே. (கூ)

## காரைக்காலம்மையார்.

*தன்னதத்த தானதன தன்னதத்த தானதன*
*தன்னதத்த தானதன தாத்த தாத்தன.*

அம்மையப்ப னயகில மும்மளிக்கு நாயகனு மம்மை யெற்கெ னுவுரைசெய் சீர்த்தி வாய்ப்புற, மன்னையெற்பு ரூப முற வுன்னிமுக்க ணுனையரு ளண்முபெற்றி யான்முனுடன் மாற்றி யேற்றுட,—னிம்மையிற்பன் மானவர்கள் பன்னுசொற்க ளால்வருவ தென்னைமைத்த மாமிடற னேக்குளேற்கென, வெண்ணியற்பி னீள்கயிலை சென்னியிற்செ லாவமல னின்னயத்த தாள்பரசு பாட்டி தாட்டுணே,—வம்மையப்ப போத வென முன்னழைத்த ழாவருளி யந்நிலைக்க ணேய்பொருள் கண் மூற்றை யார்க்குந, லம்மைமுத்தி மேவுநிலை தன்னவைத்து மால்விடையி லண்ணல்சத்தி யோடணுகி யூட்டு பாற் கொள்கின்,—ணம்மளிப்ப நேரதனை யின்னுமக்கை வாமமலர் நண்ணவைத்து ஞானமுத மூட்டி வாழ்த்திடு, நம்மவர்க்கு மாரருள்செய் வண்மைமிக்கு தாரசுகு ணம்மிலக்கு சேயை நனி காக்க வேத்துவாம். (௧௦)

## கண்ணப்பநாயனர்.

*தன்னத் தனத்தன தந்தன்ன*
*தந்தன்ன தாத்ததனன.*

கண்ணப் பனெப்பதோ ரன்பின்மை யென்றுண்மை தேற்றுசுருதி, கைம்மிக் குரைத்தபே ரன்பின்னி யைந்துன்ன வாய்த்தவமுதை,— யெண்ணைக் கடக்குமா னந்தம்மு கந்துண்ணு மீர்த்தமுகிலை, யெம்மைப் பவத்துநோய் சிந்தும்ம

ருந்தைம்மு னேத்தல்புரிது,— முண்ணெக் கொரத்திகா ளந் தின்னு குன்றின்முந் நோக்கமுதலே, யுன்னித் தொழச்செலா முன்றன்னை யன்பின்ன மூர்த்தியெனமு,— னண்ணிப் பதத்திலே பண்பின்ன மந்துண்மை காட்டுபவனே, நம்மைப் புரக்குமா பந்தன்னை நன்றும்மெய் காக்கவெனவே. (கக)

## சண்டேசுரர்.

*தந்தான தனனதன தந்தான தனனதன*
*தனனத் தனத்தன.*

**ம**ன்ருதை குருபனவ னென்ருனு மொருசிவனை யகனிற் புறத்தியல், வண்பூசை யிடர்செயினு டன்கோறன் மரபெனும வுரையைப் புதுக்குபு,—தன்ருதை பிரிவரவு டன்சார்பொ டருள்செய்சிவ னெனலுய்த் துணர்த்திய, சண்டேசசிவகுரவர் பொன்பாத கமலமல ரிணையைப் பழிச்சுது,—நன்ருேரு மருமறையு ணின்ருேர்மெய் தெளிபொருளி தெனமுற் றெருட்டலி, னம்பாக மமுரைநெறி விண்டேத நெறிகொளுவு மமணக் குருக்களே,—வென்றேறு சிவநெறிசெய் தன்றேறு கழுவினவர் தமைமுற் றிருத்தியவ், வெம்பாத கவினைகட வுட்போத கமழசிவ மணியைப் புரக்கவே. (கஉ)

காப்புப்பருவமுற்றிற்று.

# செங்கீரைப்பருவம்.

சீர்மேவு மோங்கார மேயென் றுணர்ந்துளோர் செப்புமெல் லணையமர்ந்து, தெள்ளமு தளித்துடன் சுட்டொணு வொன்றைநேர் தேற்றுங் கரங்களூன்றி,— நார்மேவு பேரன்ப ருள்ளத் தடத்தென்று நணிவீற் றிருந்துசென்னி, நலம்பெற மலர்ந்தருண் மணங்கமழ் தரும்புனித நாண்மலர்க் கமலமென்னுந்,— தார்மேவு செய்யவோர் தாணீட்டி மற்றுமோர் தாண்மடித் தூன்றிமுகமண், டலமசைத் தன்னவற் றென்னருண் முன்னுறச் சார்நயம் பலவிளக்குந்,— தேர்மேவு குருநாத திருஞான சம்பந்த செங்கீரை யாடியருளே, சீகாழி மீகாணு மாகாத லாகார செங்கீரை யாடியருளே. (க)

ஓவாது நால்வேத மோதுசுப் பிரமண்ணி யோமென் றுணர்த்துமொருநீ, யுலகம் பவத்துன்ப மற்றுவீ டுற்றிடற் குண்மைநாங் காட்டினல்லான்,— மேவாது சுத்தாத்து வித சைவ சித்தாந்த வியவதா பனமுமண்மேல், வேறொருவ ரான்முடிவ தன்றென் றுளங்கொண்டு வேதியன் மலர்த்தடத் திற்,—பூவாழு மவனனைய சிவபாத விதயர்களி பூத்திட வவற் கொர்தனையன், போலவொரு பாலவுரு வேலவரு சீலவருள் பொங்குமித னுக்கிணங்கத்,— தேவாதி தேவநந் திருஞான சம்பந்த செங்கீரை யாடியருளே, சேணிலவு தோணிபுர வாணர்நனி பேணமல செங்கீரை யாடியருளே. (உ)

ஒருவாம லுலகர்தம் பக்குவக் சேற்பவோ ரொருபொருளை நாடிநாடி, யுண்மையீ தென்றென்று கொண்டுமேன் மேற்செலற் கோதுபன் மார்க்கவகைவைத்,— திருளோடு மொளிர்வேத நெறிதழைத் தோங்கமற் றிந்நெறிச் சென்றுளோர்தம், மிளைப்பாறி யருடோயு மின்பநற் றுறையாகி யேனையெவ ரும்பசுக்க,—ளருள்கூரு மாபதியெ * பதியென்றுதேற் றுண்மை யார்சிவா கமம்விளங்க, வத்துறையி னுக்குரிய சுத்தமிகு பத்தர்குல மத்தனையு முத்தியுறவே,— திருவாய் மலர்ந்தழுத திருஞான சம்பந்த செங்கீரை யாடியருளே, திருவமலி பிரமபுர மருவுபர சிவதனைய செங்கீரை யாடியருளே. (௩)

மாயைதரு சூரன்முத லோர்செயிடர் மூழ்குமக வானைமுத லோர்க்கிரங்கி, மற்றவர் சிறைத்துய ரொழித்தருளுதற்கென மலர்ச்சர வணத்தடத்தி,— ஞயுமக வாயபொழுதாயசிறை நீக்கன்முன் னவர்ப்பெறு சிருட்டிமுதல்வ, னகச்சிறை யெனத்திரு வுளத்தெணி வெளிச்சிறை யவற்புரி பிரண்டுநீக்குந்,— தூயதொழி லுக்கதிக மாகிய மலச்சிறைகடொல்லுலகின் மேவுமுயிரின், றொகுதிமுழு தகலவருள் புரியுமது கருதிமகி துன்னுதவ மன்னிலங்கச்,— சேயுருவ மாகிவரு திருஞான சம்பந்த செங்கீரை யாடியருளே, திகழுலகு புகழ்புகலி நகரின்வரு குககுரவ செங்கீரை யாடியருளே. (௪)

வேதமூன் றெனவுலக மூன்றையெசுர் வேதநூன் மேன்மையிற் பூமிதனையவ், வேதநாப் பட்காண்ட மென்னநீர் நாட்டையிடை மேய்பிரச் சின்னமென்ன,— வோதுசீ

* உமாபதியே என்பதில் ஏகாரம் குறுகியது.

காழியைச் சீருத்ர மென்னமறை யோர்மரபு தனையெழுத் தைந், தும்மெனச் சிவபாத விதயர்பக வதியாரை யுடற்குயிர் விளக்கமென்ன,— மேதக விளக்கவோ வுயிர்க்குளுயி ராயெ ன்றும் விரவிவிர வாதுநிற்கு, மெய்ம்மைநேர் தேற்றவோ வைந்துளுயி ரென்றருள் விளக்குசிவ சத்திவண்ணச்,—சேத னச் சேயான திருஞான சம்பந்த செங்கீரை யாடியருளே. சேணுலகு நாணுமெழில் வேணுபுர மாணுமணி செங்கீரை யாடியருளே. (ரு)

## வேறு.

அம்மையு மிம்மையு மும்மையு மும்மையு மாரரு ளொ ன்றேசெய், தாவிகள் யாவையும் வாழ்வுற வேபுரி யாரிய னெ ன்றேசொல்,—செம்மையி துன்னல தென்னரு மன்னிலர் தேர்தர நன்றேதுஞ், சீரிய வேதசி வாகம மாதிய சேர்பெனு மன்பாளர்,—தம்மைய மெய்ம்மைய நன்னிலை யின்னிலை தா வறு மின்பாரத், தானெளி தேதரு பேரரு ளாகர தாம்விடை யுந்தாமு,—மம்மையு மண்ணலு முன்னுற முன்னின னுடுக செங்கீரை, யண்ணலர் பண்புகல் சண்பையின் வண்புய லாடுக செங்கீரை. (சு)

வானவர் மேற்கொளு மாரருள் கூர்த்தவர் வாதனை விண்டேக, வாழ்வுறு பாக்கொரு சேயுரு வாக்கவின் வாய்தர வந்தாய்முன்,— மானவர் யார்க்குமெய்ஞ் ஞானவண் வீட் டினை வாழிய தந்தாளு, வானவர் யாக்கையி னோர்மக வாய் ப்புவி மாணுற வந்தாய்பி,—னீநவில் சேய்ப்பெய ரோர்சில நாட்கல நீள்பொது வன்றாக, நேர்தன தாக்கொள னூல்பல

சாற்றிடு நீர்மையி னன்றோர்து,—மானமர் வார்க்குவ மானமி லாக்கவி யாடுக செங்கீரை, யாழியின் மேக்குயர் காழியின் மாக்களி ருடுக செங்கீரை. (எ)

கண்டவர் கண்கண் மனங்கள் டடுங்கணி காணிவை யென்றேதக், காமர்ப லாயிர கோடியர் பேரழ காவ திரண் டாலு,—மண்டுமொ ரங்கம தன்கவின் முன்புரை வானற வென்றேறு, மாதரு மோதரு மாயிர கோடிய வாய்நிமி ரென் றாழும்,— விண்டொரு வுங்கதிர் கொண்டொளி ருந்திரு மே னியு மன்போவா, வீறுதி யானியர் காணிய பேணிய வீடுற வந்தேப,— லண்டரு மண்டரு மின்பருள் கின்றவ னுடுக செங்கீரை, யாணவம் வீணுறு தோணிபு ராதிப னுடுக செங் கீரை. (அ)

## வேறு.

சினமுத லினபழு தினமுழு தொருவிய சிந்தா நின் றோர்பு, திறலில புறமத நெறியென வறநெறி சென்றே நன் றேறு,—மனமுதல் புனிதமு னுறவரு ணெறியினில் வந்தே நந்தாமெய், வரனுறு சிவநிறை தவநெறி மருவுபு மன்பே ரன் பாள,—ரினமறை முடிசிகை யொளிர்சிவ னடிநிழ லின்பே தந்தாளு, மிதநெறி யிதுவென நினதடி தொழவரு ளெந்தா யம்போச,—தினகர னெனமுழு துயிருய் வருள்பவ செங்கோ செங்கீரை, திருவளர் சிரபுர மருவிய குருபர செங்கோ செ ங்கீரை. (கூ)

கவுணிய ருயவுயர் கவுணியர் குலம்வரு கந்தா வந்தா ருங், கழலிணை தொழினவர் மலவினை கழுமது கந்தே தந்தா

ள்வம்,—பவமுழு தொழிபந வரதமு நிலவுசு பஞ்சா ரும்போ கம், பருகுதிர் வருகென வுலகரை விளிதரு பண்பீ தென்றே மெய்,—விவரம தருளுன தலனுறு பெயருமன் விண்போய் நின்றும், விடைதரு கொடியுமு னுணர்நல னருண்மெ னில் வென்றே றுன்சால்பு,—சிவசிவ முழுதுணர் பவரெவர் குருபர செங்கோ செங்கீரை, செழுமதி தழுமுடி கழுமல முழு மணி செங்கோ செங்கீரை. (கO)

செங்கீரைப்பருவமுற்றிற்று.

# தாலப்பருவம்.

வேத முதலாம் பிரணவத்துண் மேவும் பரம னுமா பதியே, வேறின் றென்ப தறியார்க்கும் விளக்கு மிதழி மதி முடியெம்,—மாதி தரப்பெற் றப்பரனைப் பாகு முனிபா னின் றுநடந், தகிலத் துயிர்முற் றுணவுறலா லமலன் சிறப்புத் திருவருளே,—போத நிறைபக் குவர்பான்முன் போந்து விரி யும் பொதுக்கருணைப், பொலிவு போலுங் காவிரிவண் புன னாட் டரசே விரைகமழும்,—பாத போத சீதவருட் பாவார் நாவா தாலேலோ, பாலார் சீலா மேலோர்சொல் பாலா தா லோ தாலேலோ. (க)

வானும் பரவும் பொருநைதரு மலயா சலமா முனிக ரக, மந்த்ரோ தகமே யுலகுய்ய வருகா விரிநீ ரொழுக்கொடு சென்,—மீனும் பொருநீ ரெதிர்த்தோடு மீனு மதனை விரைந் தோடி, விழைந்துற் றெடுத்தாங் கதையிளஞ்சேய் மென்கைக் கொடுக்கு மவனுமறை,—தானும் பரவு மதுரைநதிச் சமண ரேடு நின்னேடுந், தாவி யெடுத்துன் கரனல்கமைச் சருநேர் சோணுட் டரசேயோன்,—பானுங் கடந்த சிவனுண்மைப் பாவார் நாவா தாலேலோ, பாலார் சீலா மேலோர்சொல் பாலா தாலோ தாலேலோ. (உ)

ஈசன் றனைமெய் யன்பர்மறக் கினும்பே ரருளாங் கவ ரைமறக், கினுமெஞ் ஞான்றும் பிரவாக வெல்லை மறவாக் கா விரிநீர்,—தேச மிகுபைங் கூழ்வளர்ப்பான் சென்று பலன் முற் றுறவளித்துன், றிருவாய் ஞான முதவெள்ளந் தெவிட் டித் தமிழ்த்தே வாரசிவ,—நேச வருளி னுருவாகி நெகிழு முள்ளத் தடம்புகுந்து, நிறைமெய்ச் சிவமாண் பலனளித்த னிகர்நீர் நாட்டு நிழன்மணியே,—பாச நாச கோசவருட் பா வார் நாவா தாலேலோ, பாலார் சீலா மேலோர்சொல் பாலா தாலோ தாலேலோ. (ங)

சத்தி யாகிச் சிவமாகுந் தனிமெய்ப் பொருட்சி வானு பவந், தானுர் சுவானு பவமாகச் சார்தற் குரிய பத்திவிதை,— வித்தி யதிற்பைஞ் சத்தியைமுன் மேவக் கண்டவ் வருளான் மேல், வெளிய சிவங்கண் டனுபவிக்கும் விதமீ தென்னப் பின்னவர்சொன்,—னத்தி விதைப்ப வெழும்பசிய நாறுவள ர்ந்து வெண்கதிர்க, ணல்க வுணவாந் திருச்சோழ நாடு புரி நற் றவமணியே,—பத்தி முதிர்ந்தோ ருளத்தமர்சம் பந்தா

கந்தா தாலேலோ,பாலார் சீலா மேலோர்சொல் பாலாதாலோ தாலேலோ. (ச)

மதிசே ரிதழி முடியவனி மாச லேசை யுடன்விடை மேல், வந்தும் பராஅ பரஞான மயமே யாகுந் திருமுலைப் பா,—லதிகா தலின்மிக் களித்தாளிவ் வகில மளித்தா ளம்மை யன்றே, வத்தன் றனையோர்த் துடன்சேர்ப்பா ளவளே யன் றே வென்றேமுன்,—றுதிசேர் சத்தி யுருவாமெய் துலங்க நிறுத்திச் சத்திசிவந், தொல்பூ மணம்போற் பிரிவின்மை துலக்கி யருளுந் தோடுடைமுற்,—பதினு ருயி ரம்பதிகப் பா வார் நாவா தாலேலோ, பாலார் சீலா மேலோர்சொல் பாலா தாலோ தாலேலோ. (ரு)

## வேறு.

வானவர் தானவ ராலுறு மாதுயர் மாற்றிய வோ ராறு, மாமுக னாகிய நக்கிர கத்தொடு மற்றது மாற்றினம் யா,—மானவை நிற்கவோ ரானன னாகிய நக்கிர கத்தொ ழிலே, யாற்றுது மென்றருள் கொண்டொரு சேயுரு வாகி யுயிர்த்தொகையை,—யீனமி கும்பிற விக்கட லின்றுமெ டுத் தொரு மோக்கமெனு, மிருங்கரை யேற்றுத றேற்றிய தோணியெ னும்பதி யின்கணிரீஇத்,—தானவ னாகுமெய் வாழ்வரு டேசிக தற்பர தாலேலோ, சைவத் திருநெறி மெ ய்வைத் தருளிறை தாலோ தாலேலோ. (சு)

மானிட னாகுமு மாபதி தன்னிள மாமக னீயவனி, வாழ்வுற வேரா பாலவு ருக்கொடு வந்தமை நன்குணர்வா,— னுறு ரூபநஞ் சேய்தரு வானிவ ணாரண வென்றதையே,

நாடிமுன் மாதவன் மாதவ ஞானசம் பந்தநன் மந்திரதி,— யானமு றப்புரி காஞ்சியின் மேற்றளி யெய்திய ளித்ததுமெய், யென்பது ணர்த்துசம்பந்தத யாநிதி யெண்குணசிவசூனே,— தானவி லோதன மேனிமிர் காழியர் தாபர தாலேலோ, சைவத் திருநெறி மெய்வைத் தருளிறை தாலோ தாலேலோ.

பாண்டிநன் ஞட்டினெல் வேலி புகுந்து பரிந்து மரு ந்தெனநீ, பண்பதி கந்தரு பண்பதி கந்தனி பாடி யமர்ந்தி டுநாட்,—காண்டகு நங்குக தேசிக னீண்டருள் கான்முக கான்முளையாய்க், காசினி விண்ணெயர் காசினி வாழ்வையு கந் தன னெல்லையுளா,—ஞண்டவன் வார்கழல் பூண்டுநெஞ் செ ன்னியென் ஞண்டவ னீயருள்கென், ருடுது மென்றுசெல் கும்பசன் முன்பணி யம்புய மென்பதனே,—தாண்டவன் மை ந்தசம் பந்தவின் புந்து தயாநிதி தாலேலோ, சைவத் திரு நெறி மெய்வைத் தருளிறை தாலோ தாலேலோ. (அ)

நானென தாதிய பாசவி மோசன நாகவி லேகரரி, நாரண ஞாண ஞதிய ரோதியு நாடரு ஞானசுதா,—பானக போனக பாலவி லோசன பாலக மாலகமா, பாதக காதக மேதகு போதக பாவன தேவனமா,—கானதி ராவிட வேதசு பாடித காமரு பாசுரமீ, காயக தாயக நாயக மாயகர் காணரு மாமணியே,—தானவ நாசநல் வானவ நேச தயாபர தாலே லோ, தாணுகு மாரசு வேணுபு ராதிப தாலோதாலேலோ.(கூ)

வேத மபக்குவ பக்குவ சீவ விதத்தினர் பின்னருசி, வேட்கைய ராதலை நோக்கியொ ரோர்பொருண் மெய்ப்பொரு ளென்றுகொண்மா,—வோதினு மந்நிலை நின்றவர் பின்பரி

பாகம துற்றுணர்கா, லுண்மை பரம்பரை யின்வெளி யாக வுணர்த்திடு மப்பொதுநூன்,—மேதகு சாரம தேயதி தீவிரர் மெய்ச்சிவ தீக்கைபெறீஇ, வேட்டிஃ தோர்புமெய் வீட்டுறு மாதமிழ் வேத மளித்தருக,—தாதவிழ் செங்கழு நீர்மல ரம்புச தாரண தாலேலோ, தாரணி மீதொளிர் சீரணி காழிய தா லோ தாலேலோ. (க0)

தாலப்பருவமுற்றிற்று.

# சப்பாணிப்பருவம்.

செம்மைவெண் மைப்பதும மேவியிரு பொருணல்கு செம்மைவெண் மைக்கொடியனுர், திருமார்பு மருநாவு மொரு வாத் திறத்தர்புட் செம்மைவெண் மைக்கொடியினுர்,—மெய் ம்மைவே தம்பரவு மோரிரண் டுத்யோக மேவுமத் தேவரா னும், விரவுமடி முடியென்னு மவயவந் தானுமெ விதத்தி னும் மெட்டொணும,—லம்மறைக் குட்பொருள தாயுமத னுக்குமறி வரிதாகி நிற்குமுதலே, யழைத்தமுது வாங்கிநோர் சுட்டிமால் விடையின்மே லமர்தரக் காட்டியருளுந்,—தம் மையொப் பரியசெங் கைகுவித் தையவொரு சப்பாணிகொ ட்டியருளே, தவராச ரன்புந்து திருஞான சம்பந்த சப்பாணி கொட்டியருளே. (க)

செந்தமிழ்ப் புலவோர்கண் முந்துரைத் துளவாய செய்யபிள் ளைக்கவிக்குட், செப்புமச் சப்பாணி யாவுமுப சா ரமே சேய்ப்பருவ நோக்கிநல்லார்,—தந்துணைக் கைகொட்டி வேண்டநிகழ் மேனுமச் சைசவத் தன்றியின்றுஞ், சாமிநின் பாலென்று முண்டென்றி யாமின்று சாற்றவும் வேண்டுமோ தண்,—கொந்தலர்ப் பைம்பொழிற் கிள்ளைநின் பண்பாடல் கூறுகோ லக்காவிலெண், குணத்தினின் றனைமாசி லாருறுத றேற்றலிற் கோதில்பொற் றுளமுன்பு,—தந்தளித் தனகொ ண்ட செங்கைநன் றேதுமோர் சப்பாணி கொட்டியருளே, சகமேழு மின்பஞ்செய் திருஞான சம்பந்த சப்பாணி கொட் டியருளே. (உ)

உலகமுழு தொருவடிவி னுறுவிராட் டென்னுமவ் வொருபுருட னுருவிலேனை, யூரடங் குதல்போ லடங்காத தீதமா யோதுந் துவாதசாந்த,—தலமதிற் செங்கதிரை யகி முடு செய்கையிற் சமண்மூடு செயலைநாடிச், சைவகுல தெய் வமணி யாமானி யாருமச் சசிவமணி யாரும்வேண்டக்,— குலவுசை வத்தம்ப நாட்டுவா னேகியக் குலச்சிறை யமைச்சர் நின்றுள், கும்பிட் டெழாமலங் குற்றதிற னேக்கியருள் கூர் ந்தெடுத் தின்பளித்த,—சலசமல ரனையதண் செங்கரங் கொ ண்டைய சப்பாணி கொட்டியருளே, தருவாய்மை வண்பண்ப திருஞான சம்பந்த சப்பாணி கொட்டியருளே. (ந)

சேயேயொர் சேயாகி யுலகெலா முய்யவளர் சீகாழி வாவிவந்து, சிவஞான முமையம்மை தரவுண்டு வேதஞ் சிவா கமத்துண்மைசெவியின்,—வாயார வுண்ணநா மற்புதம்பற்பல வயக்கியருள் கின்றவார்த்தை, வண்செவிகொண் முன்பமுது

கொங்கைபொழி யன்புருகு மங்கையர்க் கரசியார்பின்—னேயார்வ மிக்குநின் வரவுணர்ந் தாலவா யெய்திளங் கோலவெழிலு, மிருவிழி களிப்பவுண் டருண்மேவு பொற்பதத் தினில்வீழ்ந் திறைஞ்சவுடனே,—தாயாக நன்றெடுத் தருளுமச் செங்கைகொடு சப்பாணிகொட்டியருளே, தருஞான நின்றுண்ட திருஞான சம்பந்த சப்பாணி கொட்டியருளே. (ச)

பொன்மயக் கிண்ணமுது தண்ணமுது கொண்டினருள் பொங்குசெங் கரனுமுண்மை, போதமுற நேர்சுட்டு செங்கையுஞ் சத்திசிவ போதவா னந்தநீயென்,—னன்மையை யுணர்த்தியிடு மக்கரஞ் சத்திசிவ நற்பொருளி னத்துவிதமா, நண்ணிரண் டன்மையாய் நிற்றன்முறை யாமென்று நாடிமுன் சேர்த்துமனைய,—சின்மயச் சத்திசிவ மத்துவிதமாயினுஞ் சீவருய வாண்பெணுருவிற், றிருமேனி வேறுபோற் காட்டலின் விரித்துமிச் செய்கையுற வன்பர்முடிமேற்,—றன்மையப் பெருவாழ்வு தரவைக்கு மங்கைகொடு சப்பாணி கொட்டியருளே, தனைநேர் வருங்கந்த திருஞானசம்பந்த சப்பாணி கொட்டியருளே. (ரு)

## வேறு.

மீதெயில் வான்மதி மீதுற னீள்பரன் வேணியின் வாளரவும், வெண்மதி யும்முற வாகி வசித்தல் விளக்கிடு கூடனகர்ப்,— பாதக ராமம ணுதர்செய் தீவினை பாண்டியன் மேற்றெனவப், பாவக னைச்சுர நோயென வுய்த்திரு பண்பினர் வேண்டியவா,— தீதகு நோயு மருந்து மபக்குவர் பக்குவர் செவ்விதெரீஇச், சேர்த்தலை யோர்த்தென நோய்த்திறன்

மாற்றிய தீண்டிய பாண்டியனைக்,—கோதகல் பூதியி னலருள் கூர்கர கொட்டுக சப்பாணி, கோமளை சாமளை கோமகண் மாமக கொட்டுக சப்பாணி. (சு)

சீவர்க ளோபர தந்திர ராரரு டேர்ந்துசெய் தன்மை யரச், சீவரின் மேனிகொ ளுமும தாற்றுப் தேற்றுகென் றேமுறையிற்,—பூவொடு மொண்கயி றிட்டு மெடுத்துமொர் பொன்புரை யத்தழலிற், போத நிறுத்துமவ் வேடதின் முற் புகல் பொற்புறு வெற்புமைதன்,—பாவுன மேனியெ னப்ப சந் துண்மை பலர்க்கும் விளக்கருளின், பண்புற நின்றுளிர் கின்ற தெடுத்தருட் பாமுறை யுட்பினருங்,—கோவை யுறப் புரி செங்கர முன்கொடு கொட்டுக சப்பாணி, கோமளை சாம ளை கோமகண் மாமக கொட்டுக சப்பாணி. (எ)

மாலய னரண னதியர் த்யாதிரு வர்க்கத் தினரெ னுமம், மாமறை யோர்முடி யாயதி யேயனு மாபதி யென் றேது;—நீலக ளத்தன்மு னளொர் துரும்பை நிறுத்திமு னவ்வுண்மை, நிகழ்த்தின னப்பரன் மாமக னுதலி னீபினு மத்திருணம்,—போலுமொ ரோலை யெனத்தகு மேடெதிர் போகிய வேகவதிப், பொருபுன லிருகரை யினுமெழு திரு நதி பொற்புற வுய்த்தருளுங்,—கோல விணக்கர மேல வெ டுத்தருள் கொட்டுக சப்பாணி, கோமளை சாமளை கோமகண் மாமக கொட்டுக சப்பாணி. (அ)

தந்தை மகற்கினி தாற்றலு மத்தனை யன்றரு தாதை க்குத், தானினி தாற்றலு மேநனி தேற்றுறு தன்மையி தெ ன்னமுனட்,—செந்தமி ழின்மண முந்து மணந்துநீ சென்

றுமு வாயிரமாங், திருமந் திரமெனு முயர்தந் திரமுறு சேர்த் துறை சைப்பதியி,—லிந்தணி தந்தை யிடத்துல வாக்கிழி யேற்றுல வாப்புகழுங், கீதலெனச்சிவ பாத மனத்தர்கை யின்க ணளித்தருளுங்,—கொந்து விரிந்தெழு செங்கம லங் கொடு கொட்டுக சப்பாணி, கோமளை சாமளை கோமகண் மாமக கொட்டுக சப்பாணி. (௯)

வேத நெறிப்பெறு சைவ நெறிச்சிவ மிக்கொளிர் பத்திமையே, மெய்யத னுள்ளுயி ரொண்சிவ மாகி விளங்கு கண் ணப்பர்தமக்,—கேதுமிச் சித்தலி லாத திருத்தரவ் வீசர் விழிக்கினிதா, வின்விழி தந்தமை போலல வாழி யிரந்தெனி னும்மொருகட்,—போது தருந்திரு மாற்குமவ் வாழி புரிந்த ருள் வீழியினிற், பொன்பொலி காசுத மத்தர் மகார்க்கருள் பொற்பென வைத்ததுகொள்,—கோதகலுங்கர மென்கம லங் கொடு கொட்டுக சப்பாணி, கோமளை சாமளை கோமகண் மாமக கொட்டுக சப்பாணி. (௧0)

சப்பாணிப்பருவமுற்றிற்று.

# முத்தப்பருவம்.

தேவர்முத லெத்திறத் தோரெனும் பாலர்பாற் றேட் டமிக் கழுவதேயத், தேத்துமுள தத்துவா தீதவுப சாந்த மெய்ச் சின்மயா னந்தனீயிப்,—பூவுலக முய்யவருண் மக

வான தன்மையெப் புன்மையோ ருந்தெளியவே, பூதப் பரம் பரைப் பொலிவந்த மூப்பயன் பொற்புமிக் கோங்குதற்கே,— மேவுமுயிர் நீற்றுநெறி நின்றுசெஞ் சோதிபுக மேற்புரி கருத் திறைற்செம், மேனிவெண் ணீற்றினர் திருத்தோணி நோக்கி மெய்ம் மேன்மலர்க் கண்பிளிப்ப,— வாவன்மிக் கழுதருளி யம்மையப் பாவென் றழைத்தவாய் முத்தமருளே, யாரணம் பரவுபரி பூரணன் குமர திரு வருள்வாயின் முத்தமருளே. (க)

ஐந்தொழிற் கூத்துநேர் காணருஞ் சீவருக் காகவே பின்னைபோனின், றருளுமவ் வன்னைசிவ ஞானநேர் பரு கிடற் கருகரன் றென்றுநின்பாற்,— றந்தருள வுண்டருளி யன்னசீ வர்க்குரிய தாகமிகு பாகமாக்கித், தாயர்தஞ் சேயர் தரு நிலையினம் முலையமுது சங்கமுய்த் தூட்டலென்னச்,— செந்தமிழ்ச் சங்கமுற் றுந்தலைக் கொண்டிடுந் திவ்யதே வார ரூப, சிவந்தரும் போதமய மாகியொளிர் கின்றவச் செய்ய சங் கத்தமைத்துக்,—கந்தழித் தன்னையென வுந்துலக் கின் னருள்செய் கவிராச முத்தமருளே, காலமுண் டாகவழுதால முண் டானையுரை கனிவாயின் முத்தமருளே. (உ)

அருண்ஞான முமையம்மை யூட்டவுண் டருளுநின் னருட்பால ரூ●நேர்கண், டருளாசை யுந்தவரு திருநாவினுக் கரசெ மடிகள்சீ காழிமுன்னா,—வருமாதி ருச்செவியினுற வேமு னர்ச்செய்தவ மாண்பலம் வாய்த்ததெனவே, வள ரார்வ மிக்கெழமு னெதிரேகி யப்பெரியர் வாய்மைவே டப் பொலிவுகண்,— டொருவாது யிர்த்தொகைகண் முழுதாளு முக்கணர னுருவேயெ னத்துணிந்துள், ளுருகாமு னற்ப ழமை வெளியாக வுண்ணிறைந் தொழுகிமது ரிக்குமின்

சொற்,— றெருள்கூர வப்பரென முறையா லழைத்துமலர் திருவாயின் முத்தமருளே, தெய்வமெய்ச் சைவமுல குய்ய வுய்த் தருள்குரவ திருவாயின் முத்தமருளே. (ந)

தேகவுற வாலப்பர் சிவபாத விதயரிவர் சின்மயானந்த வுறவாற், சித்தப்ப ரென்றுகொண் டாடுவோ கீசர்முன் செப்புமச் சொற்கடந்தும்,—தாகமிக வேகமுற வாலவாய் சார்ந்து நின் ருடொழு தெழாவமைச்சர், தமையெடுத் தளவினின் னுள்ளக்கிடக்கைவாய் தன்னில்வெளி யாகிவந்த,—தாசவே செம்பியர்பி ரான்குலத் தின்பமக ளார்க்குந் திருந்துசிந்தை, யமைச்சீ ருமக்குநம் மதுரேசர் செய்யதண் ணருள்வாலி தே யெனுஞ்சொற்,— பாகமுற வேவினவி வண்கிழமை தேற்று செம் பவளவாய் முத்தமருளே, பாசமறு நேசர்பணி தேசிகசர் வேசசெம் பவளவாய் முத்தமருளே. (சு)

பூழியர்பி ரான்செய்கை பிதிகாரம் வேறிலுயிர் போஞ் சிவத் ரோகமெனினும், பொற்பினெக் காலமும் பயினித்ய மங்கலப் பூணுக்கொ ளூனமின்மை,—யாழியலு மென்சொல்லின் மங்கையர்க் கரசியார்க் கெய்தும் திறங்குறித்து, மிங்கெழுந் தருளிநம் மரசைத் திருத்தியருள் கென்றுவேண் டினர்தமன்பு,—மேழிசைத் தமிழ்மறையின் வெள்ளைநீ றணியும்வேந் தென்றுநீ யருளியாங்குன், னிருகரந் தீண்டுபே றுஞ்சைவ முறுவிதியு மிறைக்குண்மை யுட்குறித்தும்,— வாழிவெந் தீயினைப் பையவே செல்கென்ற மணிவாயின் முத்தமருளே, வளர்காழி நகர்மேவி யமர்ஞான சிவகுரு மணிவாயின் முத்தமருளே. (ரு)

## வேறு.

மன்னுடை மன்றகத் துந்தன தாற்றலின் மாண்புண ராரிடத்து, மறுதலை பழிதரு பொழுதினு மிவர்தன மாசறு தேசுணர்வான்,—றன்னையு முன்புகழ் கென்னு மிலக்கண சால்புல கோர்த்திடுவான், ருயினு நீகனி பேணிய செம்பியர் தங்குல மாமகளார்,—பன்னுறு பெண்மை செலுத்திட வோமுலை பால்பொழி பாலனெனும், பற்றினி லோவர சன்முனுரைத்தமை பார்த்தனை யீனவமண்,—முன்னெளி யேனலனென்னருள் வாய்மலர் முத்த மளித்தருளே, மோனமெய்ஞ் ஞானசு போனக வாய்மலர் முத்த மளித்தருளே. (சு)

அப்பம ரப்புனை யப்படு வார்சடை யப்ப ரெனத்துணிவா, லன்பொளி ரின்புரு முன்புறல் கண்டெ னப்ப ரெனத்தொழுநின்,—னப்பர்பிள் ளாயென வற்பி னுரைப்பவு மாங்கிசை வித்துறுநீ, யன்னவர் முன்னிகழ் நன்னிலை பன்னியவர்த்தரி சித்திடுவா,—னற்புமிகு த்தெழ லால்வின வித்துனை பண்ணுபு பூந்துருத்தி, யாங்கவர் நேருற ருழ்த்திட வாற்றரி தப்பரெங் குற்றனரென்,—முற்புகல் பொற்புறு தூயசெவ் வாயினின் முத்த மளித்தருளே, மூசிய பாசவி மோசக தேசிக முத்த மளித்தருளே. (எ)

எந்தவி தத்தினு நீபிற வாதவ னென்பது சித்தமதா, விங்கொரு மாமறை யோர்சிசு வாயுப நயன மியைந்திடுபோ,—தந்தியுண் மந்திர மஞ்செழுத் தென்றதை யன்றி யதன்பெயரா, வாண்டுறு வேதியர்க் கோதிலை யென்கொலவ் வஞ்செழுத் தும்வெளியே,—பந்தம றுத்துயர் வீடெளி தா

ம்பரி பக்குவ முற்றிடுவோன், பரவுநல் லூர்ப்பெரு மணமணத் தியார்செவிப் பாங்கினு மோங்கிசையான்,—மூந்துற வேய ருள் செந்துவர் வாயினின் முத்த மளித்தருளே, மூதறி வா ளர்க ளோதரு ளாகர முத்த மளித்தருளே. (அ)

## வேறு.

வேத முதல்வ வனையமறை விரிதா ரகசுப் பிரமணிய, விடையும் விடையோன் றனைவிடைமேல் விளக்கும் வலக்கை மலர்க்கமல,—போதை யார்செம் பொற்கிண்ணம் பொலியும் வாம கரத்தமுத, புனிதாத் துவித சித்தாந்த போத மலர்செந் தமிழ்வேத,—தாத மார்க்க முதனுன்குந் தழுவுஞ் சைவர் தந் தலைவ, சண்பை யதிகம் பண்பதிகஞ் சாற்றுங் கிழமைச் சம் பந்த,—காத லாகி மலர்ந்தருள்செங் கனிவாய் முத்தந் தரு கவே, கருணை பொழியுந் திருமுகசெங் கனிவாய் முத்தந் தருகவே. (௯)

ஊரும் பேரு முறவுமிலா தொளிர்வான் பொருளே யூர்பேர்முன், னுடைய சீவ ருயப்புகலி யூருஞான சம்பந்தப்,— பேருந் தூய சேயுருவும் பேணி மேற்கொண் டருளமுதப், பெருவா ரிதியுண் டநவரதம் பெருகி யொழுகுந் தேவார,— நீரும் பருநா வூறவிளை நிலமா னுளப்பைங் கூழ்ஞான, நிறைய விளைந்து சிவாநுபவ நிலவு முழவ ரினிதுண்ணக்,—காருஞ் சம ழ்ப்பப் பொழிமுகிலே கனிவாய் முத்தந் தருகவே, கருணை பொழியுந் திருமுகசெங் கனிவாய் முத்தந் தருகவே. (௰)

முத்தப்பருவமுற்றிற்று.

# வருகைப்பருவம்.

அஞ்சு முகத்தோ டதோமுகந்தந் தஞ்சு முகந்தீர்ந் தமராருய, வாறு முகனுஞ் சதாசிவன்கணாறு முகனு யமர்ந்தருணீ,—தஞ்ச மிருபா ருய்ந்திடச்சுந் தரபாண் டியன்பாற் றடாதகையார், தாமுங் கருப்ப வதிபோலுந் தன்மை கொளவுக் கிரனுன,—விஞ்சு செயல்போற் பகவதியார் மெய்ம்மைத் தவத்தி னுற்கருப்ப, மேவி னுர்போன் ஞெளிர்மேனி விளங்க வயன்வா வியினுலகம்,— வஞ்ச மலந்தீர்ந் துயமக வாய் வந்தாய் வருக வருகவே, வரனே தருசம் பந்தசிவ மணியே வருக வருகவே. (க)

காசின் மணிகட் கியற்கையொளி கால்வ தெனினுங் கைவல்லான், காமுற் றடுத்துக் கழுவின்முழுக் கரிசற் ஞெளிரு மதுபோலப்,—பாச மகலும் பாகசிவ பாத விதயர் தவத்தாலப், பாணி கடக்குந் தோணிவளம் பதியி லவனாப் பவக்கடனின்,—றீச னடித்தா மரைக்கரையி னேற்ற ஞெரித்தாங் காவிதடத், தெய்தி யதிதீ விரதரநின் னியைபான் முதிரும் வரையமர்ந்து,—வாச மலரத் தடத்தவர்பின் வந்தாய் வருக வருகவே, வளவா ரமுத வாமகர மணியே வருக வருகவே. (உ)

உலக முய்வான் மாமறைசொ லுமைகோ னீற்றி ஞெளிசெய்சிவ, ஞெருவ னேதி யேயனென வொருதன் பேர் முத் திரைபடர்க்கை,—நிலையி னுரைத்தாங் கவன்சுதனீ நிகம சார தேவார, நிமலன் றனைமால் விடைமீது நின்று தைக் கோர் விடையாக,—வலமென் கரச்சுட் டினிலுணர்த்தி வயக்

குந்திருத்தோ டுடையமுதல், வாய்மைத் திருப்ப திகத்தீற்றில் வளர்நின் றிருப்பேர் முத்திரையே,—மலர விளக்கித் திருத் தளியுள் வந்தாய் வருக வருகவே, வரத சரத விரதர்பணி மணி யேவருக வருகவே. (ங)

கொல்லா நலநற் குணமூலங் குணக்கே டொழிக்குங் கருவியெனக், கூறுஞ் சீவ காருணிய குணமே யுடையா ரெ னவடுத்துப்,—பல்லோர் நயப்ப வெளிக்காட்டிப் பலபா தக மே புரியமணர், பாண்டி முழுதுந் தமநெறியே பரப்பிச் சைவ நெறிமறைத்து,— நல்லார் துதிவேந் தையும்வசித்து நயக்கு மப்பர் தமக்குமிடர், நாடிப் புரிந்து மன்பினர்க்கு நவைசெய் திடவு மவைகழுவ,— வல்லாய் கழுவி னுறவரு ளால் வாளா வமர்ந்தாய் வருகவே, மாசு நீக்குந் தேசிகமா மணியே வருக வருகவே. (ச)

திருநெல் வேலி தனிற்றேவச் செழியன் பாஞ்ச ராத் திரம்பேர்த், திறத்து மயக்க நெறியென்ப தேற்று மதை மேற் கொண்டந்தோ,—பரிதி வளைச்சூ டுண்டழனிற் பலர் சூழ் திறமாற் றுதுமெனவேற், படைக்கை யமலன் சினகர முன் பணிந்து வேண்ட நாமாகி,—வருசம் பந்த னமனொ ழித்து மதுரை யமர்ந்தா னிவண்முத்தி, வசத்தி லுறுவான் மான்மயக்க மாற்றி யருள்வா னென்றபடி,— மருவு மனைய நெல்லையினில் வந்தாய் வருக வருகவே, மருள்செய் மதப்பா ழிருளிரிக்கு மணியே வருக வருகவே. (ரு)

பானு கிரணத் தாமலரின் படியே யசைவற் றுலகசைக் கும்,பரமன் சேய்நீ நெல்லையினிற் பாஞ்சராத்ரச்சுடுபிணியை,— வானும் பணிநின் சந்நிதியின் மலய முனிநின் றேவார, மரு

ந்து புரிந்து மாற்றிடநீ வாளா வமர்ந்த வாறேபோற்,—றேனு கருந்தே மலர்ப்பொழில்சூழ் தெளிச்சே ரியினின் பாவெழு துந், திருத்தொண் டினர்செய் வாதிடையத்தேரர் சைவ முற வாளா,—மானு தலிலா விளங்கோலம் வயங்க வமர்ந்தாய் வரு கவே, மகிழ்கா தலியார் மணவாள மணியே வருக வருகவே.()

கந்தா வருக வருள்பழுத்த கனியே வருக புறப்பொ ருள்கள், காணுங் கண்ணுக் குளம்போலக் கண்டு காட்டு முத ல்வருக,— நந்தா வருளா கரவருக நாடுந் தவர்சே கரவருக, நாவா யொழுகுந் தேவார நரலாய் வருக ஞானசம்ம்,—பந்தா வருக பரமசிவ பாத விதயர் சுதவருக, பாச நாச நேசர்பணி பகவ வருக பகவதியார்,—மைந்தா வருக யாங்களுய வந்தாய் வருக வருகவே, மலையான் மகளா ரமுதநுகர் மணியே வருக வருகவே. (எ)

பூத நாத வருகபர போத வருக வேதமொழிப், புனித வருக வநிதவினை பொன்ற வருக மன்றல்கமழ்,—பாத வருக வுமைக்கிளைய பால வருக நீலநெறி, பாற்ற வருக நீற்றுநெறி பரப்ப வருக வமணெழிசம்,—வாத வருக நம்பாண்டார் மருக வருக காதலியார், மகிழ்ந வருக திருஞான வள்ளல் வருகவுள் ளநிறை,—மாதர் மிகுமன் பினர்க்கருளும் வரதவருகவருகவே, வாய்மை யருளுஞ் சேய்மயவொண் மணியேவருகவருகவே.()

மன்னே வருக சிவச்செங்கோல் வளர்ப்பாய் வருக விரு நிதிகூர், வள்ளால் வருக பேரின்ப வரத வருக வமுதளிக்கு,— மன்னே வருக வுணர்வருளு மத்த வருக திருவெண்ணீற், றவிழ்த வருக மலப்பிணிகொ லண்ணல் வருக வருமறை சொன்,— முன்னே வருக தமிழ்மறைகான் முகிலே வருக

கவுணியர்கண், முதலே வருக சிவஞான மூர்த்தி வருக சீர்த்தநகில்,— வன்னே ருமைபால் கொளத்தடத்து வந்தாய் வருக வருகவே, வண்ணப் பசும்பொற் கிண்ணமுத மணியே வருக வருகவே. (கூ)

தேவன் வருக மறைவெளிசெய் செல்வன் வருக வென்புருச்செய், சித்தன் வருக பரசமய சிங்கம் வருக தேவாரப்,—பாவன் வருக பால்கமழ்வாய்ப் பாலன் வருக சீலவருட், பண்பன் வருக நண்பர்தொழும் பரமன் வருக தமிழ்மணக்கு,—நாவன் வருக தாவிலுயிர் நாதன் வருக சீதளநீர்,நாடன் வருக சீகாழி நகரன் வருக வுயிர்க்கருள,—வாவன் வருக கவுணியரில் வந்தாய் வருக வருகவே, வாசி நீர்பொற் காசுபெறு மணியே வருக வருகவே. (க0)

வருகைப்பருவமுற்றிற்று.

# அம்புலிப்பருவம்.

வாரமுத விந்துவென நின்னையுல கோதுமிவன் வாரமுதன் மாதர்சுபரி, வாரமுத விந்துவடி வன்னை தரு வள்ளநிறை வாரமுத விந்துவாய,— னீரமதி யாவைநீ யீங்கிவனும் வெம்பிறவி யீரமதி யாவனுட்கூற், றின்மையிர வைத்தெறுவை நீயுமிவ னண்ணிஞே ரின்மையிர வைத்தெறுகுவான்,—சாரமுய லுறுவனங் களங்கமா னுகத் தரத்தனீ யன்பரின்பு, சாரமுய லுறுவனங் களங்கமா னுகத் தரத்தனு வா

ங்க சைப்ப,—ளுருமிச் சொல்லளவி ளுதனிகர் வாயிவனெ டம்புலீ யாடவாவே, யாறுதலை யேறுபதி ளுயிர கணுதி பனெ டம்புலீ யாடவாவே. (க)

காமனக் கவிகையென வேகொளப் பெறுவைநீ கா தன்மெய்த் தொண்டர்களுரு, காமனக் கவிகையுற வே கொளப் பெறுவனக் கவிகைதேர்ந் தவருவப்ப,—மாமனைக் காதல்புரி தாமநீள் சேமனிதி வாய்முடியில் வைகுவாய்நீ, மாமனைக் காதல்புரி தாமனீள் சேமநிதி * வாய்முடியில் வைகு மிவனு,—நாமநல மாமனுவை யாமெனவி காரமின் ளுரவர் சொலப்பெறுவைநீ, நாமநல மாமனுவை யாமெனவி கார மின் ளுரவர் சொலப்பெறுமிவ,—ளுமினைய சொற்றொடரி ளுனிகர்வை நீயிவனெ டம்புலீ யாடவாவே, யாரணஞ் செந்தமிழ்செய் ஞானசம் பந்தனுட னம்புலீ யாட வாவே. (உ)

தண்ணமுத மேனியினை யாயுமொரு மாசுணந் தான் படத் தான்மறைக்குந், தனையும் பொருதுவெள் ளுடல்கருகி யாவிபோந் தன்மையுற் றுழல்வையென் றும்,—விண்ணவர்க் கரியநந் திருஞான சம்பந்த விமலதே சிகமெய்வாழ்வு, விரை மலர்த் திருக்கடைக் கண்ணேக்கி ளுல்வெவ் விடங்குதித் தோடவருளும்,— வண்ணம்மிஃ தெண்ணுகிலை முன்னருள சொன்னிலையின் மாணுவை யெனப்புகன்ற, மைவாய்மை யென்றெண்ணு மோகவச மாயினைகொன் மற்றதற வேயொ ழித்தி,— யண்ணன்மே ருவையொக்கு மேனுமணு நீங்கரி லம்புலீ யாடவாவே, யாணர்பலர் பேணுதிரு வேணுபுர வாணனுட னம்புலீ யாடவாவே. (ங)

---

* வாய்—உண்மை.

பேசுமறை யீசன்முடி மீயுறினு நீயிளம் பிள்ளைமதி யென்பர்குரவன், பேதைதனை நீதழுவு பாதகனு மாதலிற் பேதைமதி யென்பர்நிலவு,— வீசியுல கர்க்குவகை செய்தி டினு நின்னையவர் வெள்ளைமதி யென்பர்பிரிவின், மெல் லியரை மேலுமிடர் புல்லியசெய் தீவினையின் வெம்மைமதி யென்பரென்றுந்,— தேசுதிகழ் பேசுபுக ழீசன்மக னேசநி றை செம்மைமதி யாளரொன்று, சிந்தைமதி தந்துபணி கந் தனுயர் பந்தனிறை செல்வமதி கந்தரவலா,—ஞசறுமி வா ய்மையினி யேனுநனி யோர்திமதி யம்புலீ யாடவாவே, யம் மையினு மிம்மையினு மும்மையினு மெம்மிறையொ டம்புலீ யாடவாவே. (௬)

நீயுமமு தந்தரு திறத்தினிவ னுக்குனையு நேரென் றகந்தை கொள்ளே, னின்னுடல நித்தியமி துன்னுதேய் வதினுலக நேரினுங் காணநிற்றி,—தேயுடலி னெழுகுநின் னமுதமு மநித்தியத் தேகவுப காரமேயாஞ், செப்பதுவு மெப் பொழுது மின்றிவன் றிவ்யநித் தியவருட் சொப்ரகாசத்,— தூயதிரு மேனியினன் வாய்தருதென் மாமறைச் சுதையுயி ர்க் கின்புநித்யத், தொல்வீடு நல்குமிஃ தென்றுமமு தம் பெருகு சொன்னவள வங்கைதேற்று,—மாயுமித னுனக் கதிகனிவ னென்பதென் னம்புலீ யாடவாவே, யாருகதர் காரிருள்கொன் ஞானசிவ பானுவினொ டம்புலீ யாடவாவே.

மானுமுய லுங்களங் கம்மென விளங்கவே மன்னு கின் றூயுயிர்க்குண், மலக்களங் கம்முழுவ துந்தொலைத் தின் பருளு வான்களங் கென்றுமில்லா,—னீனசட வானமதி லே தினந் திரிவைநீ யெம்பிரான் ஞானமேயா, மின்பவா னின்

ணிறைந் தெண்ணினெய் போலவே நின்றியரு டந்துமேவு,—ஞானவுரு வத்தனீ யல்லோ னெனப்படுவைநாடிலிவ னேனை மதமா, நள்ளிருள்கொல் செங்கதிரி னெல்லோ னெனத்திகழ்வ னுவலோர் தானவப்பே,—ரானவில்ப நின்றனையிவ் வானவர் சிகாமணியொ டம்புலீ யாடவாவே, யகிலமுந் தந்த வணல் கமுதசம் பந்தனுட னம்புலீ யாடவாவே. (௬)

கண்ணுதற் பரமன்முடி யின்னுறப் பெற்றுமுன் கயரோக நீங்கிலாயக், கடவுண்முன் கொல்லிமழ வன்மகளை வன்முயல கன்பிணித் துன்புதீர்ப்பா,—னெண்ணியுய்த் திடவவச மாயவள் கிடப்பநே ரிறைஞ்சிவேண் டிடவும்வாளா, விருந்தனன் கன்மானு பவநோக்கி னன்கொலோ வெய்துபிணி தீர்த்தி டானுய்த்,—தண்ணருட் சம்பந்த வாழ்வவந் தக்கணஞ் சாற்றுபிணி மாற்றியருளுந், தயாளுவென் றலகெலா மோதுதிற மோர்ந்துநீ சார்ந்திடுவை யென்னினின்னே,—யண்ணநீர்த் தருளிப் பவப்பிணியு நீக்கியருண் மம்புலீ யாடவாவே, யற்றவர்க் கற்றசிவ னற்றமிழ்ச் சொற்றவனெ டம்புலீ யாடவாவே. (௭)

என்றுமோர் படியின்றி யேற்றமுந் தாழ்வுமே யெய்தியுழல் கிற்றியாலீ, தென்னமதி நன்னர்மதி நின்னைமதியாவுரைத் திடுதல்கேண் மதிநின்மாமன்,— கன்றிமதி யாதிட்ட சாபமுழு துந்தெருன் கண்ணுதற் கடவுடேவி, காதல்புரி தாதைக்கோ ரவமதியு ருமையைக் கருதியோ வுயிரொழிந்தாங்,— கொன்றடலை யென்புக்கு மாவிதந் தாழினையுமுப்பக்க மாற்றவல்லா, னுரையளவி னுலன துடற்குறையுமாற்றிடுமொ ருரையளவி னுலுமிவனை,—யன்றியெத் தேவ

ரினு மாவதன் ஞோர்திநீ யம்புலீ யாட வாவே, யாசில்சிவ நேசர்துதி பேசுசிவ தேசிகனொ டம்புலீ யாடவாவே. (அ)

கூடலிடை வாதினிடை தீதமணர் நீதியறு குற்ற முழு தும்புரிந்தும், கோதிலரு ளேதரவொர் சேயுருவ ளுகி வரு கொள்கைக் கிணங்கமேலு,—நீடருளி னுலவர்கள் பாவி னிய வோதியரு ணீர்மையினை யுன்னியேகொ, னீவரவு தாழ்த்தனைய நாளரசு கூர்த்தமதி நேர்புரி குலச்சிறைக ளப்,—பீடிலம ஞுதர்கழு மீதுற விருத்தியருள் பெற்றியி னினக்குமன்ன, பெருந்தகை புரிந்திடு மருந்துயர் நினைந் துறல் பிடித்துறுதி யுறுதியீதே,— யாடலின் றுலகெலா மாடல்செய் யாடலனொ டம்புலீ யாடவாவே, யத்துவித சுத்தசிவ சித்தபத வித்தகனொ டம்புலீ யாடவாவே. (கூ)

வேதமுத லாயகலை யாவுமுண ராமுதலை வெள்வி டையின் மீதுணர்த்து, மென்கைமலர் நீட்டியுனை யேயழைத் திடுபேறு மேவநீ நோற்றதென்கொ,— வீதணுவு மோர்கிலா யெண்ணிரண் டாயிரவ ரேவலுக் கிச்சை மிக்கா, ரின்னுமெ ய்த் தொண்டர்பலர் துன்னிநிற் கின்றதல கெங்கும்ப்ரசித்த மேநீ,—போதலையெ ஞுமுனிவு ருனருளின் மூர்த்தியப் புத்த நங் திப்பெயரினேன், புன்றலைக் குற்ற * சனி நின்றலைக் கத் தொண்டர் போதவாக் கொன்றுபோது,— மாதலா லுய்ய மதி யாகிலின் னேவிரைந் தம்புலீயாடவாவே,யானசம் பந்த ண்மகன் ஞானசம் பந்தனுட னம்புலீ யாடவாவே. (க0)

அம்புலிப்பருவமுற்றிற்று.

---

* பெயரெச்சத் தகரந்தொக்கது.

# சிற்றிற்பருவம்.

வானிற் பொலியும் பொலம்பொகுட்டு மணிப்பொற் றேர்கள் வரிசைபுக, மறுகி லொருபா லொதுங்குபுசெம் மணிமுன் னுய பன்னிறத்த,— மீனிற்பொலியு மணிகளினுன் மிளிர்மா மதில்சிற் றறைதெற்றி, விதங்கள் பலநல் லுணுக்கள்பல மிசையு முணவு மறந்துமட,—மானிற் பொலியும் பிணைவனையேம் வகுக்குஞ் சிறுவீ டெண்மணித்தேர், வருவல் விரைவைத் தடுத்திலதே மறையுட் பொருளை வடித்தெடுத்த,—தேனிற் பொலியுஞ் செந்தமிழ்வாய்ச் செல்வாசிற்றில் சிதையேலே, தேவர் பரவு மூவர்புகழ் செல்வா சிற்றில் சிதையேலே, (௧)

சென்றார் செல்வார் செல்கின்ற திறத்தா ரென்றுந் திரிபின்றிச், சிவாது ப * வாதி மாதுரிய திவியா முதமே நுகர்ந்திருப்ப,—மன்றாய் மனையாய் மாளிகையாய் மலையாய் நதியாய்ச் செய்குன்றாய், மணியா சனமா யத்தாணி மண்டபாதி யாய்விரிந்து,—நின்றே யொளிரும் பெருவீட்டை நிகழ்நல் லூரிற் பெருமணத்தி, னிறைசெஞ் சோதி யாயருள்வாய் நீயே யன்றோ மலவிருளைத்,—தின்றே யொளிரு மலரடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தெய்வத் தமிழ்ப்பா மெய்வைத்த செல்வா சிற்றில் சிதையேலே. (௨)

மாசு நீக்கி யியலொளியெண் வம்ப லளக்குந் திருமேனி, மணநீ ராட்டி யொற்றுடை வயக்கி நறுஞ்செம் பொ

* அதிமாதுரிய அமுதமென்க.

ற்சுண்ணம்,—பூசி நுதல்வெண் காப்பணிந்து புரிகண் ணே று காப்பெனுமைப், பொட்டிட் டினிய கபோலத்தும் புனையு முச்சிப் பூமுதலா,—மாசை மணிப்பூ ணுசையொழித் தாசை வளர்க்கும் பகவதியா, ரணிந்துச் சியுமோங் தணைத்திங்ங ுைட விடுத்த திதற்கேயோ,—தேசு வளர்பூஞ் சீறடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தென்னர் சுரநோய் முன் ஞெழித்த செல்வா சிற்றில் சிதையேலே. (௩)

இயற்கை யொளியா லுலகீன்ற விமாச லே சை யென நினைக்கண், டேல்வைத் தடத்திற் சிவபாத விதயர் கரத்தாற் பெற்றுவந்துன்,—னியற்கை யழகே யொளிர்தரவு மின்பா லன்பாற் செயலழகு, மெண்ணுக் கடங்கா வகைபுரிந்திவ் வெழின்மா மறுகில் விளையாடு,—மியற்கை பாலப்பருவவி யல் பென்று விடுத்த பகவதியா, ரெந்தாய் நின்று ணிலங் தோயு மிதற்கே சகியாள் புழுதியுந்தோய்,—செயற்கை யறி ந்தா லென்படுவாள் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தென் ஞட் டரசு முன்ஞட்டு செல்வா சிற்றில் சிதையேலே. (௪)

காண்பார ரார்கண் ணுதலாய்நீ காட்டாக் காலென் சுருதிமுறை, களந் தாரை சின்னநினைக் கருது திருப்பேர் சொலிக்காட்டின்,—மாண்பார் வரவு தெரிந்தெழுந்து வண ங்கித் துதிப்போ மன்னதவும், வணங்கு மாறு வணங்கென் னும் வாய்மைப் படிநின் செயலன்றே,—பூண்பா வைக்கோர் செயலுண்டோ பூட்டு பாசத் தெமையாட்டும், புனித நினது வரவுணராப் புன்மை யேமை முனிவழகோ,—சேண்பார் பர வுந் திருவடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தேரர் தம ச்கு மாரருள்செய் செல்வா சிற்றில் சிதையேலே. (௫)

ஆவி யனைத்து மனுதிபொறி யாதி கருவி பலகுடி கொண், டரசு புரிந்து வீற்றிருப்ப வவற்று ணெருக்குண் டவைசொலுங்குற்,— றேவல் புரிந்து துச்சிலென விடருற் றிருக்கும் பொய்யுடல, மெனுஞ்சிற் றிலங்கள் சிதைக்குநினக் கெஞ்சிற் றிலமோ ரிலக்காமோ,—மேவு மனைய வாவிகள்பின் வேறெவ் வெவர்க்கு மெட்டாத, விமல ஞான சிவபோக மெய்வீ டென்று முறவருள்வாய்,—தேவ ருளம்பூத் தருண் மலராற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தெய்வ மொளிருஞ் சைவநெறிச் செல்வா சிற்றில் சிதையேலே. (சு)

தந்தை குணந்தன் மைந்தருக்குஞ் சாரு மியல்பா லீச னழித், தலைமேற் கொண்டா மெனினுயிரைத் தங்கு முட லிற் பிரித்தவுடற்,—பந்த விளைப்பாற் றுதலேயப் பரமன் றொழிலா மன்றியுநீ, பரவப் பருமச் சமணரமர் பள்ளி யரு கன் பாழிகளே,—சிந்த வரசை யுவந்தனரச் செயலி னீயுங் கூடலமண், சிதைப்ப விசைந்தாய் பரம்பரைநுஞ் செயற்கு விருத்த மிதுவன்றே,—செந்தண் கமலச் சீறடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, திகழ்பொான் னகரும் புகழ்புகலிச் செல்வா சிற்றில் சிதையேலே. (எ)

பெற்ற மகட்கா முறுமயனீள் பிரமன் சிருட்டி யாமு டனீ, பேணு மகட்கா காமையருள் பேதித் திடப்பூம் பாவை யைநீ,—பெற்ற மகளாய்ச் சிவசாதிப் பிறங்கு மகளாக் கியதா ய்மை, பெருமை திகழுந் திவியவுடற் பெருவீ டளித்தாய் நாலுமுகம்,—பெற்ற விருத்தன் றன்மகளோர்ப் பெருக்கே கண்டா னின்மகள்பாற், பேரா யிரமா முகத்தருளே பெரு கக் கண்டாய் மலவிருளைச்,—செற்றொள் ளொளிகூர் சேவ

டியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செம்பொன் மாடச் சண்பைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (௯)

அகில சீவ தயாநிதியா யம்மை யிம்மை யும்மையினு, மளிக்குமிறைசேய் நீயென்கை யாருமுணரச்சோறுடன்சார்,— தகையர்க் கென்று மளித்தலுடன் றகுவீ ழியினும் பற்பலர்க்கூய்த், தருமீ துடற்கா முயிர்க்கின்பூந் தருது மெனநற் பெருமணத்திற்,—பகர்பல் லாயி ரவர்க்களித்தாய் பரிந்து பெருஞ்சோ றிதற்கெதிரோ, பசிபோய் தலைமேற் கொண் டொழுகும் பாவை யனையேஞ் சிறுசோறு,—திகழ்பல் லுலகும் புகழ்மலராற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, திருவார் பிரம புரஞானச் செல்வா சிற்றில் சிதையேலே. (௰)

வீட லால வாயிலாய் விளம்பி யிறப்பும் பிறப்புமிலா, விமல னெனவுங் கல்லால விருக்க நிழலே யில்லெனவும்,— பாட லால வாயிலாய் பகர்ந்து முகுந்தன் முதலமரர், பலரு மொடுங்கு மயானமலாற் பற்றென் றவாயி லானெனவுங்,— காட லால வாயிலாய் கழறி விளக்கு நீகூடற், கவின்வீட் டிருப்புந் தெரித்தலினின் கருத்தின் விருத்த மன்றெளி யேங்,—தேட லால வாயிலாய் சிறியேஞ் சிற்றில்சிதையேலே, சிவமே திகழ்மா தவர்போற்றுஞ் செல்வா சிற்றில் சிதை யேலே. (௧௰)

சிற்றிற்பருவமுற்றிற்று.

# சிறுபறைப்பருவம்.

வேதமுறை யோதவளர் கீதமொரு நாதவகை மேதினியெ லாமுழங்க, மிக்கசுவை யிக்கிரத மொக்கவொளி தக்கதமிழ் வேதமுறை யேமுழங்க,— நேதிகளை யாவுண்மையுபசார மோர்ந்தவையு ணீக்கியே பூர்வபக்க, நிறுவுசித் தாந்தமே யெங்கும்ப்ர சங்கியா நிகழ்சமா சம்முழங்க,—வோதிமங் குளிர்நறுக் கம்புயத் திலையமர்ந் துற்றபார்ப் புகளொடும்வண், டொலிப்பவறல் கட்டவிழ்த் துறுதோணி முன்புபாவோதிநீ சேறலேய்க்குஞ்,— சீதநீர்க் காவிரிச் சென்னிநன்னாட்டினன் சிறுபறை முழக்கியருளே, சிவைசிவனொ டதிவிரைவி னணுகவழு தருள்குமர சிறுபறை முழக்கியருளே.

இருட்பெருங் கடலின்யா மத்தெறி மருத்தினிடையெய்த்துமய லுற்றுளார்போ, லெந்தையிது காறுநீ முந்துமுபதேசமா யேழையேங் கட்களித்த,—டொருட்பெருங்கடலாய வேதவே தாந்தமெப் புடையினு மலைப்பனொந்தேம், புந்தி தெளி வாகவருள் சென்றநால் வர்க்கருள் புரிந்தசித் தாந்தவாய்மை,—யருட்பெரிய வாகமங் கூறுசரி யாதிதொண் டவனியெங் கணுமுழங்க, வத்துவித சுத்தநிலை மெய்த்தவர்சொன் முத்திநெறி யமுதவச னந்தழங்கத்,—தெருட்பெருங் காழியுல கேழுமுய வாழுமணி சிறுபறை முழக்கியருளே, சிவைசிவனொ டதிவிரைவி னணுகவழு தருள்குமர சிறுபற்ற முழக்கியருளே. (உ)

அம்பொனன் மேனிநந் தேவேசர் தந்தருளு மம்பொ னங் தாளமேயா, மங்கைகொன் டன்னைதரு மின்னிசைபு ணர்த்துபா வகிலமுய நல்குமெனிலப்,— பைம்பொனன் மேனியன் றமருக முழக்கியே பரவுயி ரழைத்துய்டான்மை, பண்ணுமப் பரன்மகனி னெண்ணமும் முயிருயும் படியரு ளும் வாய்மையேயா,— மிம்பருயிர் நீயழைத் தாலன்றி நின் னைவந் தெய்துந் திறத்தவன்றே, யெந்தையிது மாற்சார சம்பந்த மாமிதனை யென்றுமேல் கொண்டுளாய்நீ,— செம் பொனங் குணில்களின லந்தணன் குலமுதல்வ சிறுபறை முழக்கியருளே, சிவைசிவஞெ டதிவிரைவி னணுகவமு தரு ள்குமர சிறுபறை முழக்கியருளே. (௩)

ஈசனருள் காசுபெற் றப்பருஞ் சேயுமென் றிருவீரு நாளுநாளு, மிருபொழுதி னும்பறை முழக்கியே சோறிட்ட தின்றும்வெளி யாவிளக்கும்,— பேசுபுகழ் வீழியினி னீவி ருல கர்க்கருளல் பெட்டினிது வீற்றிருக்கப், பெறுந்தளி யிரண்டுமொங் குறுந்திருத் தொண்டரின் பெருங்குழாம் டந்தி யாக,—வாசிலமு தண்ணவந் நாளமர்ந் துளதான மப்பெயர்த் தாகிநின்றே, யவிர்தருந் திறனுமே வேறுசான் றினியென் கொ லகிலமுற் பரவுவாய்மைத்,—தேசுவளர் கௌணியர்க ளொண்குலச் செம்பொன்மணி சிறுபறை முழக்கியருளே, சிவைசிவஞெ டதிவிரைவி னணுகவமு தருள்குமர சிறுபறை முழக்கியருளே. (௪)

அருமறைகள் பன்முழக் கென்றுசுர பேதநோக் கத் தியா பகர்கள்சார்வ, ரனையநெறி யின்றாய வாகமத் துறை முழக் காமென்று சார்வரான்றே,—ருரியஞா னக்கொடை

யின் முரசுகோ டித்தலென வுழுவலன் பாளர்சார்வ, ருவலை மார்க் கங்கொல்படை முரசினுர்ப் பென்றுபிற ருளம்வெரீஇ யுட்குவார்கண்,— மருவுரிமை யத்துவித மெய்க்கலவி வேட் கையோர் மணமுழக் கென்றுசார்வர், வாய்மைநன் மார்க்கர் செய பேரியென வேமன மகிழ்ச்சிமிக் கெய்தவார்நின்,— றிருமலர்க் கைவிசே டம்புகல வரியதிச் சிறுபறை முழக்கி யருளே, சிவைசிவனெ டதிவிரைவி னணுகவழு தருள்குமர சிறுபறை முழக்கியருளே. (௫)

## வேறு.

மேக முழங்குஞ் சோகநுநீர் வெள்ள முழங்கு முள் ளபயிர், மிக்கு முழங்கு மெய்க்கின்பம் விரவி முழங்கும் பரவுயிரின்,—பாக முழங்குங் கருவியினு லறிவு முழங்கு நிக மார்த்தத், தருமை முழங்குஞ் சிவாகமநூ லருளின் முழங்கு மிருளில்பரி, — பாக முழங்குஞ் சரியாதி பாத முழங்கு ஞானநு, பவமு முழங்குஞ் சிவானுபவப் பயனு முழங்கும் வியனுலகுய்,—மோக முழங்குன் றிருக்கரத்தான் முழக்கி யருள்க சிறுபறையே, மோன ஞான போனகநீ முழக்கி யருள்க சிறுபறையே. (௬)

வேத நான்கு சடங்கமுறை விளக்கு தருக்க மீமா ஞ்சை, மிருதி புராண மெனுமீரேழ் வித்தை களினல் வேத முயர்,—வாத லெனவீ ரேழுலகத் ததிக முறநால் வகைநில ஞ்சா, ரவனி வேத புருடன்முக மாகு முருத்ரை காதசினிச்,— சீத நாடு கண்ணுமஞ் செழுத்திற் காழி திகழமணிச், சிவா க்க ரம்மே யோருருவிற் சிசுவா யுயநீ போந்தனையான்,—

மோத முனிவர் நனிமுழங்க முழக்கி யருள்க சிறுபறையே, மோன ஞான போனகநீ முழக்கி யருள்க சிறுபறையே. (எ)

யாவு நேர்கா ணறிவிருந்தே யெல்லாஞ் செயலா முற்றறிவு, மிதுவு மநாதி யன்றெனிலவ் விறைமை வழுவா லியற்கையது,—மேவு நிறைவு வேறொன்றை வேண்டிற் கெடலால் வரம்பிலின்பும், வேறு வயமேன் மலத்தடையாய் விழைவெய் தாதாற் றன்வயமு,—மாவ தவிர்வ யாண்டென்று மாற்றக் குறைவி லாற்றலுமஃ, தளவுட் படினவ் வலகில்செய லாகா வளவி லாற்றலுங்கொண், —மூவர் முதலாஞ் சிவகுமர முழக்கி யருள்க சிறுபறையே, மோன ஞானபோனகநீ முழக்கி யருள்க சிறுபறையே. (அ)

விக்கி னேசத் துவந்தானே விளக்கு மீசன் சுருதி புகல், வியன்முப் புரஞ்செல் காலிமையோர் வெருவ விறுத்தச் சுணர்த்தியும்பின்,—றக்க விரலில் வலிப்புளதாத் தனுப்பன் முறையும் வாங்கவொணுத், தன்மை காட்டிப் பின்பு கணேசனைப்பூ சித்தவ் வுண்மைநினைஇ,—நக்க வளவே புரம்பொடித்து நடித்த முறைபோ லுலகுய்ய, நவிலு மிளஞ்சேப் போனீயு நடித்தனேக்கி யீதுரைத்தா,—முக்க ணமலன் றிருமதலாய் முழக்கி யருள்க சிறுபறையே, மோன ஞான போனகநீ முழக்கி யருள்க சிறுபறையே. (கூ)

ஒழிவி லநாதி போதாதி யுயர்மங் கலமே நிறைதூய்மை, யுணர்மெய் மனமு மீற்றின்மரூஉ முலகுங் கிடத்தன் மலமெலித்தல்,— வழுவி லருட்சத் தியைக்கூர்த்தல் வழங்கு மொளியே முதற்பொருள்கள், வயக்குஞ் சிவநா மங்

தனக்கே மன்னு மவனே பதிசீவிப்,—பழிவில் சீவன் ஜென்மையிற்கூடத்தன் பெத்த நிலைப்பசுக்க, ளவற்றைப் பிணிக்கும் பாசவிய லாதி விளக்குஞ் சித்தாந்த,—முழுது முணர்த்துஞ் சிவகுரவ முழக்கி யருள்க சிறுபறையே, மோன ஞான போனகநீ முழக்கி யருள்க சிறுபறையே. (௧0)

சிறுபறைப்பருவமுற்றிற்று.

# சிறுதேர்ப்பருவம்.

நிறையா ருயிர்த்தொகுதி புறமாய பற்பனெறி நிலைபா வகுத்துமுறையே, நிகழ்கா லவற்றினனு பவமார்முதிர்சியினி னிரையே வழுக்கள்பலவா,—யுறலோர் பனைத்தும் வரிசையிலேவி டுத்துமுடி யுறுமே னெறிக்குவருவா, னுளநேர் தெருட்சியுறு பெருதே ரளித்துரிய வுபதேச மற்புமிகவே,— பெறுவா னிசைத்துகனி முனைவாச னைப்பழைய பிழையாய புத்திவருமேற், பிரிவாகி முற்றுமழி தரவே நசித்துநிலை பிறழா துறைத்தல்புரிவான்,—சிறுதே ருருட்டலுனதியல்பாத விற்குரவ சிறுதேரு ருட்டியருளே, சிவைபாலருந்துந்து * திருஞான சம்பந்த சிறுதேருருட்டியருளே. (௧)

* உம் உந்தாயதெனினுமாம்.

ஓதுமுறை யாதுமறி யாவெளிய ரேமுரையி லுளவாம் வழுக்கள்கருதே, லோருநின தாடல்களி கூரும்வகை காணு நசை யோவா துறுத்தலுணர்வாய்,—கோதிலிசை தேர்கிலர சாவியொழி யாதுயநி கூறுதமிழ் வேதமுறையிற், கோழை மிட ருககவி கோளுமில வாகவிசை கூடும்வகை யேழையடி யார்,—யாதுசொலி னுலுமதை யேமகிழு மீசனென வேபுக லும் வாய்மையாலவ், வீசன்மக னீயுமெம தாசையுனி யாசை யறு மின்பநிறை யன்புதருவான்,—சீதமண நாறம்பு சாத மலர் நேர்செங்கை சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந் துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே, (உ)

முத்தொழிலின் மத்திய திதிக்கதிப னுயும்விட மோதி யுட லங்கறுத்த, முராரிசொல் புராரியாற் செய்யனு யவனு ருவ முத்தியிச் சித்துநோற்ப,—மைத்தவொண் கந்தரத் தெந் தைநங் கந்தனே மானுடச் சட்டைசாத்தி, வண்காழி வரு காலே யிங்கேகு நிற்கருண்மென் மாற்றநின் ரேற்றமு ண்மை,— யுய்த்துணர்வி லார்வேறு கத்தினது மாற்றவே யோதியாங் கனேயமாற்கவ், வுருவளித் துலகெலாஞ் சென் னிமேற் கொள்ளநின் ரேங்குசிவ லோகமேகச்,—சித்திரத் திண்பெருந் தேரில்விண் ணுய்த்தவன் சிறுதே ருருட்டிய ருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே. (௩)

பானுமதி தேர்மணிவி மானமுதல் விண்செலும் பண் பொழித் தோங்குவிந்தப், பருப்பதத் தின்செருக் கொருக ணத் தொருகையாற் பாற்றிவிண் ணெறிவகுத்த,—ஞான வண் குறுமுனிய நாளுமிந் நாளினு நமந்துபோற் றுங்குரவநீ,

நவையமண்முன் மதமிகையின் மகமுடிவி னபபிருத ரானக் குவந்துமறையோர்,—மானமிகு தேரினுற லாதிசெய லோர்சி றிது மாறாது மேலுமேலும், வளர்த்துநன் னெறிமுறை நடத் தவந் தாயதை வயக்கிடுங் குறியிதாமே,—தேனொழுகு செங்க மல வம்புயா சலகுரவ சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே. (௪)

எண்டிசை மணங்கமழ்பு கொண்டலை யலைத்துவிண் ணேகுபைங் காக்கள்பூக்கொண், டிரும்பொடி சுரும்புட னணி ந்துகண் ணீர்பொழிந் தீண்டவொர் மராளமேறு,—மண்டு தன் புடையுறவொர் கொன்றைபொன் பூத்துமேல் வயங்கிரு லொழுகவாங்கோர், வண்களிற் றெதிர்நிற்றல் வெண்பொடிக் கண்டிபுனை மாதவத் தொண்டரீண்டப்,—பண்டருஞ் சொன் மானி யார்குலச் சிறையடிகள் பாங்குறப் பூழியன்முன், பரி ந்துநீ யருளமுத முகமொழுக வந்தவப் பான்மைநேர் காட் டுமெழித்,—தெண்டிரையின் மேற்றோணி புரபோத குருநாத சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே. (௫)

களமர்வன் காலையும் பேர்க்கவொண் ணுவங் கணத் துரப் பொலிசெய்வாக்காற், கார்மேதி யோடவெடி பாய் வாளை மீன்கள்பல காயநெறி யால்விரைந்து,—வளமருவு செம்மணிச் சோபான மாதியால் வயங்குசெஞ் சோதிசூழ, மன்னுகர்ப் புளதூய நீர்வாவி சார்ந்தின்ப மாரு துலாவ னல்லூ,—ரளவில்சீர்ப் பெருமணத் தன்வாக்கி னேடமல மாழ்பவக் குழியினீங்கி, யருண்ஞான நெறிகூடி வருசீலர் பலர்சோதி யதனுட் சிவாநுபவமே,—திளைதருமெய் காட்

டுசே காழியெம் பெருவாழ்வு சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டி யருளே. (சு)

ஆறுமுக னுயிரண் டெம்மியற் றினமியா மானந்த ரூபத்தினே, மனுக்கிரக மொன்றையே புரிதுமென் றோர் வதன னுய'தனே யேபுரிந்துங்,— கூறுமுக மெங்குமமை யாதொருங் கருளவுட் கொண்டதற் குரியவாற்றல், கொள் ளிடங் கொள்ளிடக் கரைநலூ ரலதிலென் குறிக்கொளீஇ யத்தலத்திற்,—சாறுமுக மென்வியா சங்காட்டி யேகுகாற் சண்பையை வணங்கிமீளாத், தன்மையுஞ் சிவபோக மண வனுக் கிரகமத் தலம்பலர்க் கருளுமாண்புந்,— தேறுமுக ாாயுலகெ லாமுணர வைத்தவன் சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட் டிய'ருளே. (எ)

புள்ளேறு முன்கொடிக ளுள்ளேறு மரசெனும் பொற் பேறு வாய்மையடையிற், புகழேறு பெயரினுந் தேற்றுமே றெனும்விடைப் பொற்கொடியி னேர்மறைத்த,—கள்ளேறு சமணர்வன் கழுவேற வேந்துநற் கதியேற வெப்புடன்கூன், கழிந்தேற மெய்யன்பர் களியேற வுலகெலாங் கவினேறு பூதியாதி,— வள்ளேறு சித்தாந்த வழியேற வேறுகொடி மாண்பேற வைத்தநின்னே, மதுரேச ரோவாது காணவோ நின்செயல் வயக்கவோ துவசதருவிற்,—றெள்ளேற வைத் துவகை கொள்ளநிற் கின்றவன் சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டி யருளே. (அ)

மணியொலியின் மிக்குறிக மூலகெலா மென்றசொ லின் மாக்கதை முடித்தவாய்மை, மத்தியிறு வாயினும் விள க்குநட ராசருண் மாமொழிச் சேக்கிழார்வா,—யணியருள வருபுரா ணத்துணின் சரிதையடி யற்கவர் மலர்க்கமலமெல், லடிகளறி வித்தளவு சிறிதுரைசெய் தேனெனு வருளியாங் குன்சொரூபத்,—துணிவுமுதல் வெளியுரு தனவுமே லும் பல்ல தூச்செயலு மேனையுண்மைத், தொல்புரா ணுதியருள் வாக்கெலாஞ் சிவதலத் தொகையெலாம் விளக்குமேனின்,—றிணியமகி மாவையெவ ரறியவல் லுநர்பரம சிறுதே ருருட் டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே. (௯)

வேதம்வே தாந்தம்பு ராணமிதி காசாதி மிக்கினிது வாழவனைய, மெய்ப்பொருள் வடித்துரிய கைப்பொருளி னல் குதமிழ் வேதமுறை வாழவாய்மைப்,—பூதமுறு காமிகம தாதியா கமவாழ்வு பொலிவுறச் சிவமெய்ஞ்ஞான, போதாதி மெய்கண்ட நூல்வாழ வனையநெறி போற்றுசந் தானம்வா ழத்,—தாதமார்க் காதிநாற் பாதசுத் தாத்துவித சைவசித் தாந்தம்வாழத், தகுபூதி கண்டிபஞ் சாக்கர மெனுஞ்சைவ சாதன மலிந்துவாழச்,—சீதள வயற்புகலி நாதபர சிற்குமர சிறுதே ருருட்டியருளே, சிவைபால ருந்துந்து திருஞான சம்பந்த சிறுதே ருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப்பருவமுற்றிற்று.

ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகள் பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள்
# போற்றிக்கலிவெண்பா.

## காப்பு.

மணிவளைத் திரைக்கை வாவித்தா மரைச்செம்
மலர்மிசை வாலிய மராளக்
துணையுடன் புகுதல் கௌணியர் மணிமுன்
சோதியுட் புகுதிறங் காட்டு
மணிதிகழ் நாரை யம்பதி நம்பிக்
கனைத்தையு முணர்த்திய வைங்கை
யிணையில்சீர்ப் பொல்லா ரிணைமலர் மலர்தா
யின்பமிக் கன்பினேத் தெடுப்பாம். (க)

## வேறு.

மதிநுதி யிதழி வேணி மாமுகத் தைங்கை முக்க
ணிதமிறை யருட்போல் லாரை யிளவல்சம் பந்த வாழ்வைக்
கதிபெறத் துதிசெய் போற்றிக் கலிவெண்பா மாலை சூட்டும்
விதிமுறை யருளு கென்று வேண்டுதன் மிகையா மன்றே. (உ)

## சுவேதவிபூதிநாயகி.

உலகெ லாமு முவந்தருணீ யொருசே
யுளப்பாங் குடனுக
வுலகெ லாமுந் தொழவெளிவந் தொளிவெண்
டிருநீ றுவந்தளித்தே
யுலகெ லாமுஞ் சோதிபுக வுய்த்தா
யடியேற் குன்புகழே
யுலகெ லாமும் பரவவரு ளுதியோ
வெண்ணீற் றுமையம்மே. (௩)

## சிவலோகத்தியாகேசர்.

உயிர்கணீ யுணர்த்தி யுணர்ந்திடி னுணரு
முண்மையென் றுலகெலா முரைப்ப
வுயிர்களோ வநாதி யெளியனிந் நாள்கா
றுதித்திறந் துழன்றன ஞெய்வின்
றுயிர்களுய் வுறநல் லூர்ப்பெரு மணத்தி
லொளிர்சிவ லோகத்யா கேச
வுயிர்நிலை யொழிந்துன் னுடனிலை பெருவாழ்
வுறுநிலை யருணிலை யுறவே. (ச)

## நூல்.

மாமேவு மார்பனயன் வானவர்கண் மாமுனிவர்
தாமேவுந் தூமேவுந் தண்காழி—நாமத்

திருத்தலத்து வந்தருளித் தெய்விகமாண் சீர்த்தி
பெருத்தெழவாங் காங்குப் பிறக்கி—யருத்திமிக

நல்லூர்ப் பெருமணமே நாதனடிக் கீழ்ச்சீவர்
தொல்லூர்ப் பெருமணமெய் தோய்ந்தின்பம்—புல்லூரென்

றன்புந்த வந்தாங் கருளுந் திருஞான
சம்பந்தர் பூங்கமலத் தாள்போற்றி—செம்பதுமத்

தோன்முதலோர் கற்பங்க டோறும் வளர்ந்தோங்கித்
தான்முதன்மை தேற்றுந் தரத்தினதாய்—நூன்முதன்மைத்

தெய்வச் சிவானுபவந் தேக்குபெருஞ் செல்வர்கள்வா
யுய்வைத் தரவந் துதித்தருளி—மெய்வைத்த

வற்புதங்கள் காட்டு மருட்பா முதனூல்கள்
பற்பலவும் போற்றும் பழமையதாய்—முப்பொற்

புரத்தாற் கொடுவிடத்தாற் போர்ச்சலந்த ராதி
வரத்தா லுயிரொடுங்கி வாடிக்—கருத்தோய்ந்து

திக்கெலா மோடியுமோர் திக்கின்றி வந்தடைந்த
வக்கடவு ளர்க்கபயா தாரமாய்—மிக்கவுய

ரந்நாற்பான் கோடியக லம்மிருபான் கோடியெனப்
பன்னே சனைவிரிந்த பான்மையதாய்—முன்னாய

வுச்சியினிற் செங்கதிர்க ளோர்கோடி யோர்தொகையா
வைச்செனச்செஞ் சோதிபுவி வான்றிகழ்ம—ணிச்சிகர

மொன்று பொகுட்டுருவா யோசனையீ ரைங்கோடி
தன்றலையின் மேலகலந் தான்கொண்டு—நின்றொளிர

வன்னதனின் கீழ்க்கீ ழதிகமொரு பான்மடங்காத் [லங்கு
துன்னியொன்றொன் றோர்மணியாய்ச் சூழ்ந்துநிரை—யின்னி

பல்லா யிரஞ்சிகரப் பந்திகண்மேற் கொண்டுளதாய்
நல்லார் தொழுங்கிரிக ணாயகமாய்—வில்லார்

சரியைகிரி யாயோக சன்மார்க்க ருள்ளத்
துரியதியா னப்பொருளா யோதற்—கரியனசீ

ரெண்ணிலவாய்ப் புற்றெனையோர்க் கெட்டனையு மெட்டரிதா
யண்ணலெமை யாட்கொண் டருள்கருணை—யுண்ணிறைய

வந்தருளும் வாகீச மாமணிமுன் னாம்பெரியர்
சிந்தனைவேட் டாங்கிருக்குந் தேத்தினிது—வந்தெளிதிற்

றன்னின்பக் காட்சிநேர் தந்தருளுஞ் சால்பினதாய்
மன்னுங் கயிலை மலைபோற்றி—யன்ன

திருமா மலையுச்சிச் செம்மணித்திண் கோட்டி
னொருகோடி யோசனைத னுள்ளால்—விரிவாகி

யொன்றே ரினமணியி னேரொன்பா னாவரண
மென்றூழ்கச் சோத மெனத்திகழா—நின்றோங்கு

மம்பொற் றிருக்கோபு ராதியுறப் பெல்லாஞ்சூழ்
செம்பொற் றிருக்கோயிற் சீர்போற்றி—யும்பர்தொழு

மக்கோயி னுள்ளே யகக்கோயி லென்னவமர்ந்
தெக்கால மும்வீற் றிருந்தருளிப்—புக்கோல

மென்பாரென் றாதா ரெவர்க்கு மருள்கருணை
யென்பா வனப்பொருளே யீந்தருளித்—தன்பாகத்

தின்சுவையும் பானு மெனப்பிரிவில் சிற்சத்தி
தன்சுதராஞ் சீவருயத் தானிரங்கி—யிஞ்சுந்

திருவருளே வாய்மைத் திருமேனி யாக்கொண்
டருகணைந்தச் சீவர்களுக் காங்கோர்—பிரதிநிதி

யுந்தா னெனவமய மோர்ந்து பணிமொழியா
னந்தா வகையுயிர்க்கா நன்மையெலாந்—தந்தாள்வாய்

தோடுடையாய் மால்விடையாய் தூமதியாய் முற்றெருடுங்குங்
காடுடையாய் வெண்ணீற்றாய் கண்ணுதலே—யேடுடைய

பொன்னிதழி வேணியனே பொன்மலைவிற் பாணியனே
பொன்னகலப் பூணியனே புண்ணியனே—யென்றாதா

வெங்கேனும் யாதா யிருந்திடினுந் தன்னடியார்க்
கிங்கேயென் றுனிடைப்போந் தின்பருளு—மெங்கோவே

யீன்றாளு மாயெனக் கெந்தையுமாய்த் தோன்றினராய்
மூன்று யுலக முழுதளிக்குஞ்—சான்றோய்

தொழுவா ரவர்துயரந் தீர்க்குந் தொழிலே
வழுவாது மேற்கொண்ட வள்ளான்—முழுமுதலே

சோதியே தூச்சுடரே சூழு மொளிவிளக்கே
நீதியே மற்றொன்று நேரிலாப்—பூதியே

காலமுண் டாகவே காதல்செய் துய்வார்க்கு
மூலபண் டார முழுதருளு—நீலகண்டா

வென்றென்று வாய்மை யிருஞ்சுருதி யாற்போற்றி
நன்றன்பின் வேண்டி நயந்திருப்பத்—துன்று

மரிபிரம ராதி யமரரெலா நந்தி
சரணிறைஞ்சி யுட்போஞ் சமயந்—தெரிபுநித

முற்புகுவார் பின்னோர் முறைபுகுந்து தங்கடொழி
லிற்புகுவ விண்ணப்பித் தெண்வேண்டி—நிற்பத்

தொழிலருளா னீங்கித் துணையடிக்கீழ் வாழும்
விழுமியபே ரின்பொன்றே வேட்டுத்—தொழுதகைய

ராயலகி லாவிதிக ளச்சுதர்கண் முற்சுரர்க
ணேயமிக முன்பணிந்து நின்றேத்த—மேயவிறற்

பாசங் கடந்து பசுத்துவநீத் தாட்கொள்சிவ
நேசம் படர்ந்தெண்ணி னெய்த்தரரை—யேசிவணச்

சேவடியே பற்றித் திளைத்துச் சிவோகமா
பாவனையே முற்றிப் பழுத்தொளிருஞ்—சீவன்முத்த

ரெண்ணிலவ ரண்ணுபுநின் றின்பமிகு மாவமுத்த
வுண்ணிறைதங் கண்ணருளா லோவியமாம்—வண்மைப்

பிரணவத்திற் போந்த பிரணவமே யாய
முரணிபத்தொண் மாமுகத்து முன்னோன்—சரவணத்தன்

வாவியினி லாவியெலாம் வாழ்வுபெற வந்தருளுந்
தூவிமயிற் சேயிருபாற் றேய்களிப்பின்—மேவியுறப்

பஞ்சப் பிரம சடங்கம் பதிஞென்றுந்
திண்சங் கிதாமந் திரவடிவாய்—விஞ்சு

முருத்திரர்முன் ஞம்பல் லுருத்திரகு ழாங்க
ளருத்திமிகப் பல்வகையி னங்கண்—விரித்தவிருக்

காதிநால் வேத மவற்றின் பொருட்டெளிவென்
ருதியருள் காமிகமு தாதியா—வாதுளமீ

ருகவரு நாலெழுசி வாகமங்க ளாற்றுதிப்ப
வாகநிற மாகருமை யாகமால்—வேகவிடத்

தாலோல மென்றரிமுன் ஞஞ்சுரரோ டார்ப்பவதை
மாலேகி யம்மெனக்கை வாங்கியரு—ளாலால

சுந்தரநந் தெய்வத் தொழுகுலசிந் தாமணிசு
கந்தமுல கெல்லாங் கமழ்க்திலங்கு—சந்தத்

திருப்பள்ளித் தாமத் திருமாலை சேர்த்தெங்
கருப்பள்ளி நீத்துண்மை காட்டி—யருட்பள்ளிப்

பேரின்ப வாய்மை பெருக்குந் திருநீற்று
நேரின்பக் காப்பேந்தி நின்றருள—வீரொன்பான்

சீரியங்க ளெல்லாஞ் சிவகணங்கள் பஃறொகையி
னேரியம்பொ ஞவகைமுன் னின்றிசைப்ப—நீரியங்கு

வேணியர னேபதியா மேவிப் பணிபுரியும்
பாணியர்சில் வாழ்நாட் பதியிலரென்—றேணுடையார்

நாருற் றுவந்துரைக்கு நல்லார் பலர்திருமுன்
மாருத் திரகணிகை மார்நடிப்ப—வோருற்

றிடைபிங் கலையியக்க மின்றிச் சுழுனை
யிடைசென் றுலகுய்யு மின்ப—நடைதன்

றிருவாய் மலர்ந்தருளுஞ் செய்கைகண் கூடாத்
தெருள்வா னுணர்த்துந் திறம்போ—லொருவா

விடைத்தலைய பொன்மணிப்பூண் வேத்திரமெய்ஞ் ஞானப்
படைத்திருக்கை நந்தி பகவ—னுடெத்த

நெருக்கொதுக்கி யேதிருமு னின்றுலவ வாய்மைத்
திருக்கொழிக்கு மாமந் திரமுற்—றுருக்கொண்

டவிர்தருசீ ரொண்மணிச்சிங் காதனத்தின் மீது
சிவனெனுநா மத்தனக்கே தேற்றந்—திவள

வுரிமைச்செம் மேனியனென் றுண்மைச் சுருதி
தெரியப் பரவுமா தேவன்—விரைசூழ்

மலராற் செறிந்து வயங்கும் பரப்பிற்
கொலுவீற் றிருந்தருளுங் கோல—நிலைபோற்றி

யெச்சமய முங்கீணின் றேறுசோ பானமா
கச்சமயா தீதமாய்க் காணவற்றி—னுச்சிமிசைத்

திவ்வியரா சாங்கச் சிவமயச்செங் கோல்செலுத்துஞ்
செவ்வியசுத் தாத்துவித சித்தாந்த—சைவநெறி

வாழியவோர் சேயருளு வான்வேண்டி மாமறையோர்
காழியிலே செய்தவத்தின் கட்கருணை—யாழி

மடைதிறந்து பாயவிள மாமதலை யாம்வேற்
படைசிறந்த செங்கைப் பரனைச்—சுடர்நிறைந்த

மூவிரண்டு செய்ய முகங்களினு முத்தங்கொண்
டோவிலின்ப மீதூர வுச்சிமோந்—தாவன்மிக

மார்புறவ ணைத்தருமை மைந்தரின் கண்ணளவாப்
பேர்பெறுசீ காழிப் பெரும்பதியி—னூர்பெருகப்

போற்றுதவ மாமறையோன் புந்திமகிழ் சேயெனமுன்
றோற்றிமிகு சைவத் துறைவிளக்கி—நாற்றிசையுஞ்

சீவரெலா முய்யுந் திறம்புரிதி யென்றரிதி
னேவியருள் வாய்மை யிசைபோற்றி—யாவதன்மே

லோது சிவகணங்க ளோர்பதினு றாயிரரை
மேதினியின் மேனரராய் மேவுறுங்—காதலிளஞ்

சேயின் பணிக்காந் திருத்தொண்ட ராய்ச்சூழ்கென்
றாயின் பளித்த வருள்போற்றி—தூய

விடையமலன் வாய்மை விடையமல மேற்கொண்
டடையமல நீத்தின் பருள்வேற்—படையமல

னெங்நாடுஞ் சென்னியிற்கொண் டேத்துதலாற் சென்னிநா
டென்னுமங் காழி யிரும்பதியு—முன்னுளி

னூற்றுதவப் பேற்றினு லந்தணர்சூ டாமணியென்
றேற்றுசிவ பாத விருதயரும்—போற்றுந்

தகவதிக மாகவுடன் சார்ந்தொழுகு தெய்வப்
பகவதியா ரும்மங்காட் பண்பு—மிகவதியுங்

காதனிறை யுள்ளங் கசிந்துருக நன்றுபுரி
மாதவமே யோர்வடிவ மாமேனி—சோதிவிரிந்

தீரிருளுஞ் சீப்ப விளங்குழவி யாயின்பச்
சீரருளும் வண்பிரம தீர்த்தத்தின்—பாரமிசை

யாதிரைநா ளோங்க வவனி குளிர்தூங்க
மேதினியே யெவ்வுலகும் வென்றேற—வேத

சிவாகமங்கள் சீர்வை திகசைவ மேன்மை
தவாதெங்கு நின்றொளிரச் சான்றோ—ருவாஅ

மதிகண்ட வாரிதிபோன் மாதவத்தின் வாய்மைக்
கதிகண்டு வாழ்த்தெடுப்பக் காதற்—பதிகண்ட

தூயகுல மாதரெனத் தொல்லமரர் சொன்னமலர்
நேயமிகு மாபொழிந்து நின்றேத்த—வாயபல

தூரியங்கள் வானியம்பத் தூமறைக டாமுழங்கக்
காரியங்கு வான்மலினங் காட்டாதொண்—சீரிலங்க

மாமறைவேள் வித்தீ வலஞ்சுழித்து நின்றொளிரத்
தூம நறுமணமீச் சூழ்ந்துலவக்—காமர்

விடர்க்கிளம் பாவையர்கண் மென்சொற்போன் மன்றி
னடர்க்கினிய பேரின்ப நல்குந்—தொடைச்செந்

தமிழ்மொழியே யெவ்வுலகுந் தன்மகிமை தேற்ற
விமிழிசையோ ரேழ்பெருக வெங்கு—மமிழ்தசிவ

ஞானவிளக் கம்பொலிய நற்றவங்க டாமலிய
மேனசரி யாதி விழுத்தொண்டு—மானிலமெங்

கெங்குந் தழைப்ப விமகிரிசை கோனென்றுந்
தங்குஞ் சிவாலயங்க டாமெல்லா—மங்கங்கே

முன்னிலுமே லாய முழுப்பிரமா ணச்சுருதி
மன்னுறவே கொண்டு வயக்கமிக—வுன்னுசிவ

பாத விதயர் பகவதியார் முன்னெவர்க்கு
மேதில் வலமிக் கிடந்திடிப்ப—வோத

வருந்தகைய நன்னிமித்த மத்தனையும் யாண்டுந்
திருந்துபல முற்றுஞ் செயவீற்—றிருந்தருளுஞ்

சிற்கோல ரூப தெரிசன னந்தமய
நற்கோலக் காட்சி நயம்போற்றி—யக்கோலப்

பண்பருளாற் கண்டுசிவ பாத விருதயரோண்
கண்பொழியா னந்தவெள்ளங் கால்பாய—நண்பினிரு

கையா லெடுத்தணைத்துக் கண்குளிர மெய்குளிர
வையா னனத்தோணி யப்பரரு—ளுய்வாக

நன்றுகை கூடிற்றிந் நாளென் றுளமுருகி
யொன்றநனி முத்தங்கொண் டுச்சிமோந்—தென்ற

னுயிரே யுயிர்த்துணையே யுண்மைநெறிச் சைவப்
பயிரே யுயவருள்பெய் பண்பார்—புயலே

யெனப்பலபா ராட்டி யிணைந்தொழுகு கற்பின்
மனைக்கொடிசெங் கைத்தா மரையின்—முனர்ச்சரவ

ணக்கமல மேற்கொ ணலந்தெரிப்பார் போற்கொடுப்பக்
கைக்கமலத் தேன்றுசதங் கைக்கமல—மிக்கமல

மாற்றுதிறங் காட்டுதல்போன் மைக்கமலக் கண்ணூற்றி
யூற்றெழுபால் வெள்ளத் துடன்முழுக—நாற்கடல்சூ

ழும்புவியுஞ் செந்தமிழ்நா டுஞ்சோணா டெங்காழி
யும்பனவ ருந்துகுல முங்கவுணி—யன்புநித

கோத்திரமு மெங்கள் குடியும் விளக்குமொளிக்
காத்திரமே விண்மணியே கண்மணியே—தோத்திரமிக்

கோதியுல கெல்லா முகந்திறைஞ்சு பேரின்பச்
சோதியே மெய்ஞ்ஞானத் தூமணியே—பாதிமதி

வேணியப்பர் பொன்விழைகிர்ர் மேனியப்பர் மிக்கதிருத்
தோணியப்பர் தந்தருளெந் தோன்றலென்—றேணியற்பல்

வாய்மைபா ராட்டி மகிழும் பகவதியார்த்
தாய்மைபா ராட்டுந் தயைபோற்றி—சேய்மைக்

கிணங்கு திருவிளையாட் டின்பநனி காட்டுங்
குணங்கொ டிருவுளமுங் கொண்டு—மணங்கொண

மலரணையி னோர்தாண் மடித்தூன்றி மற்றோர்
மலரடிகீழ்ச் சாய்த்துமுறு வல்பூத்—திலகுமுக

மேலசைஇப் பின்னமண்மா வீழமடித் தொண்சைவ
சீலமீஇப் புத்தர் திறஞ்சாய்த்து—ஞாலமெலாம்

வெண்ணீற் றொளிபரப்பி வேறுநெறி சேறன்மின்
றெண்ணீற் றொளிநெறியே சேர்மினெனு—முண்ணோக்க

மிங்காருங் காண வினிதுணர்த்து மாண்பிதெனச்
செங்கீரை யாடியருள் சீர்போற்றி—கொங்கார்செம்

பொன்னேயப் பொன்னொளியே புத்தமுதே யச்சுவையே
தன்னேர்சிந் தாமணியே சார்நிதியே—மின்னார்பூங்

கற்பகமே யொண்கனியே காலுமிர தப்பெருக்கே
யற்பகமே விப்புவன மத்தனேயு—முற்புரிந்த

மாதவமே யெங்கள்குல மாமணியே கண்வளர்கென்
ருதரமே லாகத்தா லாட்டினிய—நாதமிரு

காதுகுளி ரக்கேட்டுக் கண்குளிர வின்றுயில்கூர்ந்
தாதியா னங்காட் டருள்போற்றி—யோதியவத்

தாலாட் டிசைக்கிசையத் தாளமிசைக் சென்றன்பி
ளுலேத்து வார்களிப்ப வாதுலர்தன்—பாலேற்று

கைப்பாணி யாதருளல் காட்டுதலி னுங்குடனே
சப்பாணி கொட்டுந் தரம்போற்றி—யொப்போதா

வாணிமுத்தே யங்கனிவா யாம்பன்முத்தே யெங்கள்குலக்
காணிமுத்தே வேதா கமசார—வாணிமுத்தே

வேய்முத்தர் தந்தவருண் மேனிமுத்தே நின்னருமை
வாய்முத்த நல்குகென வாழ்த்துவார்க்—காய்முத்த

மூர லமுதொழுக முத்தங் கொடுத்தின்ப
மாரவளிக் குஞ்சீ ரருள்போற்றி—யோருமுளத்

தன்பாளர் நெஞ்சத் தசைவின்றி நிற்பதிவ்வா
றென்பான்மை தேற்று மிதமென்ன—முன்பாகச்

செந்நின் றருளுந் திறங்கண்டு சேயிழையார்
கைந்நின்று நீட்டினரெங் கண்மணியே—மெய்ந்நின்ற

சேய வொளிப்பிழம்பே தேடாத் திரவியமே
யேயு மணிவிளக்க மேவருக—தூய

தமிழ்மணமே வாய்ந்து தடமார்பின் மீதே
யுமிழ்மணமே வுங்கனிவா யூற—லமிழ்தொழுகு

தேவே தெவிட்டாத தெள்ளமுத மேவருகென்
றோவா தழைப்பா ருளங்களிப்ப—மாவாழ்பூம்

பாதசரங் கிண்கிணிமுற் பன்மணிப்பூண் கல்லெனச்செல்
சீத நடையழகின் சீர்போற்றி—சோதிவிரிந்

தம்புலியன் மேனி யருண்மகவொ டாடியநீ
யம்புலிவா வென்பா ரகமகிழ—வெம்புலிமுற்

சாடுரியெம் மான்முடிமேற் றண்மதிகைப் பற்றிவிளை
யாடுரிமை நேர்காட்டி யாங்கிருவர்—தேடரிய

பாதமுடித் தாதையைப் பாதமனத் தாதையினிக்
காதன்மிகக் காணமலர்க் கையெடுத்து—மீதுணர்த்தும்

போதமிதென் றுன்றோர் புகலவம்பு லீவாவென்
றூதரமேற் கைநீட் டருள்போற்றி—மாதர்மனைப்

பற்றறலே வீடென்னும் பான்மை சிறுமியர்தஞ்
சிற்றில் சிதைத்துணர்த்துஞ் சீர்போற்றி—கற்றைச்

சடையமலன் செங்கைத் தமருகத்தின் முன்னாட்
புடைதன் பழக்கமெனப் போற்றுங்—கொடைமுரசென்

றுதுலர்கள் வாழ்த்த வமண்முற் படைமுரசென்
றேதுயருற் றேங்க விளமகளி—ரோது

மணமுரசென் றுள்ளுவப்ப மன்னுசிவ யோக
ரிணையில் சிலம்பொலியென் றேத்தப்—புணரின்

புடையார்மென் புள்ளொலியென் றேகையுறச் சைவ
நடையா ரருட்காட்சி நண்ணும்—விடையார்

கொடியேற்ற முன்னும கோற்சவமென் றேகொண்
டடிபோற்றன் போங்கமகிழ்ந் தங்கை—முடியேற்ற

மற்றெனையோர் தத்தம் வருபக்கு வக்கிசையப்
பற்பலவா றின்பம் படைப்பநனி—விற்பொலியுஞ்

செய்யதளிர்க் கையாற் சிறுபறையி னின்முழக்கஞ்
செய்தருளு மின்பத் திறம்போற்றி—வையத்

தபபிருத நானக் கருமறையோர் செல்லுஞ்
சுபமுறைமை தேற்றுந் தொழில்போல்—விபவமுற

வேரூர்ந் திலங்கு மிசைமணிச்செம் பொற்சிறிய
தேரூர்ந் தருளுஞ் செயல்போற்றி—நாரூர்ந்த

சிந்தைகுடி கொண்டருளுஞ் சேவடிகள் சேப்பூரச்
செந்தினக ரன்னெனவெண் டிக்குமொளி—யுந்துதிரு

மேனி வியர்வரும்ப மேவு திருவிளையாட்
டானவியா சங்காட்டி யன்புவளர்—ஞானசிவ

பாதவித யர்க்கருளப் பக்குவமேன் மேன்முதிர
நீதநிலை நோக்கியமர் சீர்போற்றி—போதநிலைச்

சீரருளே காட்டுந் திருவிளையாட் டிவ்வண்ணம்
பேரருளாற் செய்துவந்த பிள்ளையார்—தாரணிமுன்

மூவுலகு மும்மழையு மும்மகமு மும்மறையுந்
தாவுபொது நீக்கித் தனிப்பதிமுன்—மூவகைவி

யாபகவி யாப்பியவி யாத்தியினை யாத்தமுறை
யேபகுத்துப் பாச மிரித்துயிரு—மாபதியோ

டத்து விதக்கலவி யன்பருள்பே ரின்புணர்த்துஞ்
சுத்த சிவாகமநூற் றொன்னெறியு—முத்தகுவெண்

ணீற்றுமெய்ப் புண்டரமு நின்மலமுக் கண்மணியு
மீற்றிரண்டு கொண்மூ வெழுத்துமெனப்—போற்றுசிவ

சாதனமூன் றும்மவற்றைத் தாங்குயிர்மூன் றுந்தெய்வ
மாதுரிய முத்தமிழும் வாழ்வெய்தத்—தீதுபுரி

மூவினையும் மாயையிருண் மும்மலமுக் குற்றமெலாஞ்
சாவினையுற் றுலென்னத் தாழ்வெய்த—வாவிசய

நாவாண்ட பல்கலையு நாமகளுந் தோமகலப் *
பூவாண்ட செல்வியுநற் புண்ணியமு—மூவாண்டின்

சீர்ப்பருவ மெய்திவளர் தெய்வத் திருமேனி
யேர்ப்பெருமை காட்டி மியல்போற்றி—சார்ப்பெருமை

யாய வடித்தடித்து வக்காரந் தீற்றியெனுஞ்
சேயசுரு திப்பொருளுஞ் சீவரிடைப்—பாயமல

பெத்தநிலை யிற்சிவனுர் பின்னுறலு முன்னுறநா
மத்தடநீ ராடப்போ மந்தணர்தா—மித்தலைநில்

லென்னுத் தடுக்கவும்பின் னேகியருள் பொற்சதங்கை
நன்னுட் கமல் நடைபோற்றி—யன்னுர்மெய்

---

* தோமகல—என்பது நடுநிலைத்தீபகமாய் கலையும், நாமகளும், செல்வியும், புண்ணியமும், அந்நியரால் வந்தகுறை நீங்க என்னும் பொருட்டாய் நின்றது,

யன்புநீர் மூழ்கி யருணீ ரவர்க்கருள
முன்புநீர் மூழ்கி முடித்துறுங்கா—லும்பிரம

தீர்த்த தடத்தமர்ந்து செல்வத் திருக்கயிலைத்
தீர்த்த னுமைக்குரிமைச் சேயெனும்வா—யோர்த்தலெனு

வத்துவிதச் சொற்பொருண்மை யந்தமே யாதியுண்மை
சத்திசிவா பின்னமுதற் றத்துவங்கண்—முத்திநிலை

பூதிநெறி யேபரப்பிப் புன்மதநீ ருக்கிமணச்
சோதியிற்பல் லாயிரரைத் துன்னுவித்த—லாதியுணர்

செம்மேனி வெண்ணீற்றர் சேணியைபொற் றேணியைப்பார்த்
தம்மேயப் பாவென் றழைத்தருளி—மும்மையவாம்

வேத நெறியு மிகுசைவத் தண்டுறையும்
பூத பரம்பரையும் பொற்புறவே—போதமலர்

செங்கமல வாய்மலர்ந்து செந்நின் றழுதருளித்
தங்கமல வாய்மைத் தயைபோற்றி—யங்கணையை

மெல்லெழுத்தான் முன்னழைத்து மெய்ப்பொருள்க ளூட்டுணர்த்தி
வல்லெழுத்தாற் பின்னழைத்த மாண்போற்றி—செல்வத்

திருக்கயிலை யென்னத் திருத்தோணி யில்வீற்
றிருக்கும் பிரானுமையோ டெய்தித்—திருக்குமரற்

பன்னாட் பிரிந்த பரிவுள் ளுருக்கவுமை
தன்னேர் முலைபொழிதுத் தந்நோக்கி—மின்னே

பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்
றெழுகின்ற காதற் கிணங்க—மொழிகின்ற

செஞ்சொல் வினையினிதே தேனுவின்பா லேனுமினிப்
புஞ்சுவைமேற் சேர்க்கு முலகமென—விஞ்சும்

பராபரஞா னப்பூம் பயோதரங்க டந்த
வராமுதம்பொன் வள்ளத்து வாங்கி—யொராஅச்

சிவஞான முங்குழைத்துச் சென்றிமயத் தன்னை
தவஞானச் செல்வர்கணெஞ் சத்துற்—பவஞானச்

சேய்கமலச் செங்கைமலர்ச் சேக்குந் தினகரன்போ
லேய்கமல நீத்துயிர்கட் கின்பருள்செவ்—வாய்கமழுந்

தெய்வத் தமிழ்வேதந் தேக்கி வெளிவருக
சைவத் திருநெறியே தான்பொலிகென்—றுய்வைத்

தருதிருவு ளங்கொண்டத் தண்சுதைவள் ளம்மீந்
துரிமையினு லூட்டவுல குய்யப்—பருகுந்

தெருண்மணக்கும் வேத சிவாகமசித் தாந்தப்
பொருண்மணக்குஞ் செங்கனிவாய் போற்றி—யருண்மணக்கு

மோரிரண்டென் றீரிரண்டென் றோதுமிவை யாதிபலர்
நாரிரண்டு சொல்லியட்டி ஞானமெலாஞ்—சார்பொடுங்குந்

தன்னிகரில் வாய்மைச் சமட்டி சிவஞான
மன்னிலைதான் பெற்றுங் ககமகிழ்வுற்—றின்னருள்சார்

தாதைவர நோக்கருளிச் சாட்சுவிதீட், சாநிலையஃ
தாத லுணர்த்த வருள்போற்றி—போதுமவ

ரெச்சின் மயங்கிடவீ திட்டாரைக் காட்டுகென்ற
வச்சொல்லின் ணப்பங்கேட் டவ்வணமே—யுச்சிமிசைச்

செஞ்சலசச் செங்கைவிரல் சேண்விளங்கச் சுட்டியுல
கெஞ்சிலமா யெஞ்சுதலின் றெஞ்சுமொன்றே—யஞ்சொற்

றிருத்தோ வுடைய செவிமு னடையாளத்
திருத்தோணி மேய சிவனுங்—கருத்தோர்ந்

துலகெலா முய்ந்திடப்பா லூட்டியருள் சத்தி
யிலகமிச மாமெய் யெழுத்துண்—ணிலவுந்

தகரங்கா யத்திரிமுற் சால்புணர்த்த லாலத்
தகரமே தாரகமாத் தாங்கப்—பகர்மறையின்

சாரமதாந் தெய்வத் தமிழ்வேத மம்முறையோங்
காரமுதல் கொண்டுலவக் கள்வனென—வாரியவே

தம்புகல்வி யங்கியாஅர்த் தம்விளக்கிச் சொல்வரிசை
யின்பொருள்க ளாழ்ந்துவிரிந் தேர்பெறவைத்—தெம்பெம்

மானிவனன் றேயம்பொன் வள்ளத் தமுதளிப்பித்
தோனிவளன் றேயமுத மூட்டியருள்—பானிலவு

மின்சொற் றிருத்தாயென் றெல்லையிலா வண்பொருள்கூர்
செஞ்சொற் றிருப்பதிகஞ் செப்பியஃ—தொண்சுவைய

வாசகமா தீக்கையெனு மாண்புணர்த்திச் சைவகுல
தேசிகனு யாண்டருளுஞ் சீர்போற்றி—நேசசிவ

பாத விதயர்க்கிப் பரிசே சிவரூப
சோதி தெரிசனநேர் துன்னுவித்துப்—போதத்

திருப்பதிகங் கேட்டுருகிச் சிந்தித்துத் தேறி
விருப்பதிக மாயோக மேவி—யருட்பதிவு

தேக்குநிலை நோக்கிச் சிவபோக வாழ்வருள்வான்
மோக்கநிலை யிற்சிவமே முன்னுறுதல்—யார்க்குந்

தெரிதரமுன் கோயிலுறச் சென்றுசிவ பாத
விருதயர்பின் காந்தத் திரும்பிற்—புரிதொடரப்

[கூடத்
பொங்கொளிய மால்விடைமேற் போந்தணிபொற்றேணிபு
தங்குபெரு வாழ்வு தலைப்பட்டே—யிங்கென்னை

யாளுடையான் பாங்குமையோ டாங்கிருந்தா னென்றுரிமை
வாளுடைய வண்டமிழ்ப்பா மாலைபுனைஇ—நீளொளிய

பொன்மணிகள் சூழ்கோ புரவாயில் வந்தருளிச்
சின்மயநற் காட்சியருள் சீர்போற்றி—முன்மகிழ்வுற

றுள்ளங் குளிர வுடல்குளிர மேனியெழில்
வெள்ளங் குளிர விழிநோக்கித்—தெள்ளுதொண்டர்

காழியர்முன் செய்தவமே காசில் கவுணியர்தம்
வாழியசிந் தாமணியே வண்ஞானத்—தாழியபா

லாழியே யாரமுதே யாரணத்துட் சாரமதா
மேழிசைய செந்தமிழ்பெ யின்முகிலே—சூழிசைய

பொன்னித் துறைமணியே புண்ணியமே வாழ்முதலே
மன்னிக் கலைவளரு மாமதியே—துன்னுமிருள்

பாற்றியொளிர் மெய்ஞ்ஞான பானுவே யென்றதுதி
யேற்றின் பருளு மிசைபோற்றி—தேற்று

மறையிதழுஞ் செம்பஞ்சு மாந்தளிரும் வாடி
யுறைபட் டடிக்கீ ழ்டங்கிக்—குறைபட்ட

புண்மருவிக் கீண்டு புரைபட் டொழியநிகர்
வண்மைசெம் மையெழின்மென் மைதூய்மை—தண்மைமுத

லாய வியற்கை யணிமணிப்பொற் றண்டைமுதன்
மேய செயற்கை விளக்கமுறீஇத்—தூய

தவமணக்கு மன்பருளத் தண்கமல மீதே
சிவமணக்க வீற்றிருந்து தெய்வத்—துவமணக்குஞ்

சேவடிகள் கன்றுமே திண்புவியிற் செல்லலுறி
ஞுவடியேன் ருங்குவலென் ருங்கணேந்தன்—போர்வடிவாய்ப்

பக்குவமிக் கோங்குசிவ பாத விருதயனூர்
மிக்குவகை யாற்றிருத்தோண் மேற்கொள்ளப்—புக்கமர்ந்து

சென்னிமிசைச் சூட்டுஞ் திருவடிதீக் கைப்பரிச
முன்னுறுசீர் காட்டு முறைபோற்றி—துன்னுதிரு

வீதிபனி நீர்பெய்து மென்றுகில்வி ரித்துமலர்
மீதுபரப் பிப்பந்தர் மேற்றிகழ—மேதகுவி

தானமணி மாலைமலர்த் தார்தொங்க லாதிபுனைஇ
வானிமிர்ப ழக்குலைய வாழைகமு—கானவிரு

பாலுநிரைஇ வேதியரும் பண்டருமெய்த் தொண்டர்களு
நாலுமறை யாதிசிவ நாமங்கள்—சாலவெடுத்

தோதொலியும் வெண்ணீற் றொளியுந் திசையளப்ப
மீதெழுசி வானந்த வெள்ளமே—யீதெனுமா

சென்றருளிச் செம்பொற் றிருமா ளிகையமர்ந்து
நன்றருளோ லக்க நலம்போற்றி—கொன்றைமதி

வேணிதிருக் கோலக்கா மேவித் திருப்பதிகம்
பாணியினி லொத்தறுத்துப் பாடுதலுங்—காணுபுசெங்

கைம்மலர்கள் கன்றுமெனக் கண்ணுதலா ருண்ணெகிழ்வுற்
றைம்மலரைந் தக்கரம்பே ராய்மலர்ந்து—தம்மிளைய

சேயெனவிக் கோலத்துந் தேற்றுகென்றோ வவ்வெழுத்தைந்
தாயவெழு துந்தாள மாங்கருள—மேயவதற்

கின்னிசையி மோற்பவையவ் வீசனில்வே றின்றியக்கு
மன்னிலைமை தேற்றி யருளக்கொண்—டென்னருமச்

செம்பொற் றிருத்தாளத் தெள்ளூ மிசைக்கருவி
யைம்பெற் றியின்விகற்ப மானவெலா—மும்பெற்றே

யவ்வச் செயல்காட்டி யன்னவற்ற நீதமாந்
தெய்வத் திறநேர் தெரிந்தியாழ்—கைவைத்த

தும்புருமுன் னுயவிசைத் தூயதுறை வல்லோர்க
ளும்பருல கும்வியப்ப வோங்கியநா—தம்பரவிக்

கஞ்சக் கரத்தமரிக் கஞ்சக் கருவியொன்றே
பஞ்சக் கருவிவிகற் பம்மெலாம்—விஞ்சத்

தருமியல்பென் னென்றின்ப சாகரத்துண் மூழ்கப்
புரிதருமத் தாளநயம் போற்றி—திரிபுவன

முய்யச் சிவஞான முண்டபெரு வார்த்தையினுற்
சைவத் திருநெறியின் சார்பினராய்—மெய்வைத்த

வுள்ளுவகை யீர்ப்பவினைந் துற்றிறைஞ்சு வாரெவர்க்குந்
தெள்ளுதிருக் காட்சியருள் சீர்போற்றி—வள்ளனனி

பள்ளியினுக் கேகுங்காற் பாலைநில வெம்மைதீஇ
விள்ளரிய தாதைமுதன் மெய்த்தொண்டி—னுள்ளவர்தங்

கானேமென் ருற்ருமைக் காரைகள்கூ கையென்னும்
பானேர் திருப்பதிகம் பாடியரு—ளானேரப்

பாலைநிலம் வேலைநில மாகப் பணித்தருளி
மேலுமஃ தேமருத மென்பாலாய்ச்—சாலும்வகை

யாக்கித் திருக்கடைக்காப் பாணைநம தென்றருளும்
வாக்கின் பொருளுண்மை மாண்போற்றி—தேக்குநனி

பள்ளிதலைச் சங்காடு பல்லவனீ சம்முதலாத்
தெள்ளுபதி சென்றேத்திச் சீகாழி—யுள்ளமர்நா

ளின்னிசையாழ்ப் பாணரவ ணெய்தித் தமைத்தொழவே
யுன்னிவரும் பேரன்போர்ந் துந்தாமே—முன்னெதிர்கொண்

டாங்குதிருத் தோணி யமர்ந்தார்ப் பணிவித்துத்
தேங்கிசையா ழின்பஞ் செவிமடுப்பித்—தோங்குதமை

யுள்ளமுற யாரேனு முன்னுகினு மன்னதுவே
பிள்ளைமதி வேணியற்சேர்ப் பிக்குமென்ப—துள்ளபடி

யென்போல்வா ரும்மோர்ந் திணையடிக்கீழ்த் தொண்டுசெய்வா
னன்போவா தீந்த வருள்போற்றி—நன்பார்

தகரவித்தை யென்ருேர்சி தம்பரத்தி லென்றும்
பகரவித்தை நீக்கும் பரன்செய்—சிகர

வகரமுத லைந்தின் வளர்தொழிலைந் தாய
நிகருமா னந்த நிருத்தம்—யகர

நகர மகர நடலையொரீஇ யப்பால்
வகர சிகர மருவிப்—புகரிலெழுத்

தைந்துநான் மூன்றிரண்டொன் ருவிளக்கு நித்தியா
னந்தமுறக் கண்டருளி நற்பதிகச்—செந்தமிழ்முன்

கற்ருங் கெரிபுகன்று காசினிவைப் பாவளித்த
வற்ரு வருளின் வளம்போற்றி—சுற்ருரல்

வேட்களத்து வீற்றிருந்து மீண்டுறுங்கால் வெண்ணீற்று
மார்க்கர்சிவ மேயாகும் வாய்மைநே—ராக்கண்டு

தில்லைவா ழந்தணர்தஞ் சீர்த்தி திருப்பதிகத்
தெல்லையருள் செய்த விசைபோற்றி—தொல்லை

நிருத்தர் தலம்பலவு நீலகண்டப் பாணர்
திருத்தலமும் போற்றிமேற் சென்று—விருத்தகிரி

யாதியடி போற்றி யவணின் றெழுந்தருளித்
தாதைதிருத் தோண்மீது சார்தலொரீஇப்—பூதலமுன்

போற்றுந் தவமேயப் போதுதிருத் தாதையுளத்
தாற்றுங் கருத்தையும்வென் ருற்றலுறச்—சாற்றுமன்பர்

பாதகம லந்தேறுமென் பாதகம லந்தோய்ந்து
மேதகம லம்புவனி மேவாடந்—தோது

மரத்துறைசெல் லார்வநனி யாகவிரைந் தேகித்
திரத்துறுதம் பாங்குடனுய்ச் செல்வோர்—வருத்தமுறல்

பார்த்தருளி யுள்ளம் பரிந்துமா றன்பாடி
சீர்த்தியுற வீற்றிருந்த சீர்போற்றி—கார்த்தமிடற்

றண்ண லமுதளித்த லன்னைகடன் றந்தைகட
னுண்ண லுணர்வென்று மோருணர்வு—மெண்ணுங்கான்

மூன்றவற்றுட் பாசவுணர் முன்னுணர்வ தன்னதமூன்
றென்றபசு ஞானம்பின் னேதிகழ்வ—தான்றபதி

ஞானமதன் மேனீழ லல்கியொளிர் மென்றுலகந்
தானறிக நேரிலெனத் தானினைந்தோ—ஞானவியற்

பாலமுத முன்னமிடப் பாலமுத மாதளித்தாள்
வாலறிவு நாமளித்தன் மாண்பென்பான்—போலமதி

யேமருமுத் தின்குடைமே லின்னிழற்செய் தண்சிவிகை
காமருசின் னந்தாரை காளமென—நாமருமூன்

றூய துளைக்கருவி யாகியமூன் றூங்களிப்ப
வேய சிவாஞ்ஞையா லேற்றருளித்—தூயதிரு

வைந்தெழுத்தோ் தாவுலகெ லாமுய்கென் றூண்டுவலம்
வந்துசிவி கையிவர்ந்த மாண்போற்றி—கந்தன்

பரசமய கோளரிநம் பாலரூ வாயன்
மருவுசம யாதீத வாய்மைச்—சுருதிசிர

சாரபுனி தாத்துவித சைவசித் தாந்தநிலை
யாரமுத மூட்டி யருண்மாதா—வோருணர்வாய்
[கொண்
நோக்குந்தோ றும்புதிதாய் நுண்பொருளாழ்ந் தாழ்ந்திடங்
டார்க்குஞ் சுகஞ்செ யருண்மயமாய்—வாக்கினிமைச்

செந்தமிழின் வைப்பாய்த் திகழ்காந் தருவமறை
யுந்தலைவ ணங்கமே லோங்கிசைத்தாய்—முந்தைமறைக்

காயசுரம் போற்றிருச்சிற் றம்பலவா ணன்றிருமுன்
னேயருளப் பண்முறைமுற் றேய்ந்திலங்குந்—தூயதே

வாரமணி வாய்மலர்ந்து மன்னு முணர்வளிக்கும்
பேரருளின் வாய்மைப் பிதாவந்தான்—சீரருளாங்

கையதனுற் றுன்பக் கடனின் றெடுத்தருளுந்
துய்யசிவ ஞானத் துணைவந்தான்—வெய்யபிற

விப்பிணிகொ ணீறளித்து வீட்டின்ப வாழ்வருளுந்
திப்பியவா யுள்வே தியன்வந்தா—னெப்பில்

சிவராசச் செங்கோல் செலுத்தியுல கெல்லாங்
கவரா சகற்றிக் கருதுந்—தவராச

ராயசரி யாதிநா லங்கம் புடைசூழ
மேயகொலு வீற்றிருக்கும் வேந்துவந்தான்—றூயசிவன்

ஞானருளிச் செய்த தகுஞ்சுருதி யொன்றேசா
மானியரும் பக்குவசா மானியத்தா—லேனையரை

நன்றருடத் தம்பதியா நண்ணிமேற் கொண்ணிலையி
னின்றுணர்த்துஞ் சாமா னியசுருதி—யென்றென்றுஞ்

சத்திநிபா தப்பெரியர் தம்பகுதி யொன்றினுக்கே
மெய்த்தலைமை தேற்றும் விசேடசுரு—தித்தனிநூ

லொன்றும் மெனவிரண்டா யோதுமறை யாகமப்பேர்
தொன்றுதொடுத் தோதும்பொ துச்சிறப்பாய்—நின்றிலகு

மன்னநால் வேத மருத்தகா டின்னியமாய்ப்
பன்னவருஞ் சூத்திரரு பத்தினவாய்—மன்னுமதன்

சாரமதா மெய்ப்பொருளே தான்விளக்கும் பாடியமென்
ஞேரும் வகையின் றெளிருமாற்—சீரியசி

வாகமநா லேழு மதனுன் மறைப்பொருட்குச்
சோகமுறு சீவருரை தூயனவன்—ருகலினச்

சூத்திரஞ்சொ லீசனே சொற்றமகா பாடியமென்
றோர்த்துணர்சி வாகமங்கொண் டோர்கென்று—சீர்த்தசிவ

தீக்கைமுத லாஞ்சைவ சித்தாந்த வாய்மையெலாந்
தேக்கி யருடே சிகன்வந்தான்—றூக்குமறை

பன்னுதிரு ஞானசம் பந்தன்வந்தா னென்றென்று
சின்னமெடுத் தோதிடமுன் சென்றருளித்—தன்ன

திருவரத்து றைந்நோக்குந் தேட்டமிக வைகுந்
திருவரத்து றையரன்முன் சேர்ந்து—திருவரத்துள்

வேண்டுவது வேண்டா விமலச்சே யாயுநாம்
வேண்டுமுறை தேற்றும் வினழவினுல்—வேண்டுதுதிச்

செந்தமிழ்த்தி ருப்பதிகத் தெய்வவருட் பாமாலே
சிந்தைமகி ழப்புனைந்த சீர்போற்றி—யந்திமதி

தஞ்சடையுஞ் செஞ்சடையோன் றனம் பலவரவி
மஞ்சடையிற் றுஞ்சுபொழில் வண்காழி—விஞ்சுதிருத்

தோணிபுகுந் தம்மையப்பர் தூயமலர்த் தாளிறைஞ்சிப்
பாணிறைசெஞ் சொற்பதிகம் பாடிப்போந்—தேணிறையு

நீண்மா ளிகைபுகவெண் ணீற்றுக்காப் பேந்திமுனங்
காண்மாத ருந்தவரூஉக் கண்டுமகிழ்—பேண்மாதா

சேர்வாச ஞமலத்தின் செய்திகொலீ தென்னனனி
யோர்வாய்தஞ் சேயென்றே யெண்ணியமுற்—சார்வாலே

கண்ணேறு காக்குங் கருத்துவசப் பட்டேரிமை
வெண்ணீறு சாத்தி விரைந்திறைஞ்சி—யுண்ணேருந்

தெய்வதமே தெய்வகுல சிந்தா மணியேயா
முய்யவருண் மேனிகொடிங் குற்றருளெஞ்—சைவகுல

வாழ்வேயென் றேத்த மகிழ்ந்தருளி யாங்கமர்ந்து
வாழ்பேரின் பக்காட்சி மாண்போற்றி—சூழ்வார்முன்

வேண்டுதலும் வேண்டுதலும் வேண்டா மையுமில்லா
வாண்டவனே யாயுமுல காக்கமுந்நூல்—பூண்டருளி

யோதுவிப்பா ரோதுமறை யுட்பொளக்கம் விட்டொழியப்
போதமுய்த்த வாய்மைப் புகழ்போற்றி—யாதரத்தின்

வாகீச வாழ்வு வருவதுகேட் டாங்கெதிர்கொண்
மாகாத லுந்தவெழூஉ வல்விரைந்—தேகாரின்

றெம்மடிக டம்மையெளி தின்புறநாங் கண்டிடஞ்ஞென்
பும்மையுறு செம்மையென வோதியரா—சின்மெய்த்

திருவேடங் கண்ணுறலுஞ் செய்மையே சிந்தை
யொருவா நமமுன் னுஞற்றி—யருள்கூருஞ்

சிந்தைநிறை யன்புத் திருமேனி தன்னசைவுங்
கந்தமிகை யாங்கருத்துங் கையுழவா—ரந்திகழ்வுந்

தூயவெண் ணீறு துதைந்தொளிர்பொன் மேனியு
நாயகன்றாள் சார்மனமு நைந்துருகிப்—பாய்வதுபோ

லன்புபொழி கண்ணு மருட்பதிகச் செவ்வாயு
மன்புமுதிர் வேபோ லருண்மேனி—யின்பருவ

மூத்த திருவழகு முன்னுஞ் சிவப்பொலிவும்
பார்த்தளவே தாதைமுறைப் பாங்குலகு—மோர்த்திடவே

பிள்ளைமையின் வாஞ்சைமிகு பெற்றியிஞே நாமறியோந்
தெள்ளமுத மாமதுரச் செம்மொழியா—னுள்ளமுவந்

தப்பரே யென்றழைத்தாங் கன்றுதொடுத் தத்திருப்பேர்
செப்புமார் வம்பெருகச் சேர்ந்திறைஞ்சி—யப்பரதன்

முன்னிறைஞ்ச வங்கை முகந்தெடுத்து டன்சென்று
மன்னிவந்த கோயில் வலமாகத்—துன்னிவந்து

வாழ்த்துந் திருப்பதிக மாண்புணர்ந்துள் ளோகைமிகப்
போழ்த்தமதி வேணியனைப் போற்றிச்சென்—றூழ்த்தபே

ரின்புவெள்ள மீதுமிதந் தேகித் திருமடத்தி
னன்பருள்கள் சேர்ந்தாங் கமர்ந்தருளி—முன்புரிமை

தேற்றுகலப் பெய்திவா கீசத் திருவடிகள்
போற்று தலுங்கடொழப் போமார்வஞ்—சாற்ற

மறுத்தன் மருமையிவை மத்தியினின் றன்பு
பொறுத்தவா கீசர்பின் போந்து—சிறுத்தபத

மென்மலர்நோ மேயுடனுய் மேவலொழி கென்றரசு
பன்முறையும் வேண்டிப் பணிந்திடவச்—சொன்மறுக்க

லாற்ற*நின் றேபின் னழகும்பார்த் தாதியமிவ்
வாற்றலுங் கிட்டியதென் றூர்வமிகு—பேற்றலோ

மீண்டரிய காழிபுகூஉ மேவி விசித்திரப்பன்
மாண்பதிகஞ் சூட்டு மலர்போற்றி—காண்பதிக

மீச்சொலாற் போற்றும் விமலன் றலம்பலசென்
றுச்சிரா மம்புகுந்தாங் கார்வமிக—மேற்செலா

வந்திறைஞ்சுங் கொல்லி மழவன் மகளுடற்சோ
பந்தருநோய் நீக்கப் பரன்றாழ்ப்ப—துந்தெரிந்து

முன்னை வினைமுழுது முன்னுறிற்போ மக்கணமே
யென்னு நிலைதெரித்தாங் கெந்தைதிருச்—சந்நிதியிற்

சோர்ந்தவச மாய்க்கிடக்குந் தோகை முயலகனோய்
தீர்ந்துயுமா செய்யருட்பாச் சீர்போற்றி—யோர்ந்து

மதிச்சடைவை நீக்க மதிச்சடைவார் போற்று
மதிச்சடையோன் றானங்கள் வாழ்த்திக்—கதிச்ச

திருத்தொண்டர் சூழ்ந்துவரச் செங்குன்றூர் வந்து
கருத்தொன்ற வீற்றிருக்குங் காலைப்—பெருத்த

நளிர்சுரத்தாற் றொண்டர் நடலையோர்ந் தாற்ற
துளமிகுத்த பேரருளா லும்பர்—களைவிடத்தைத்

தன்னு ளடக்கித் தலையளித்த சீகண்ட
மின்ன லொழிக்கு மியல்பினதென்—றன்ன

---

* எதிர்மறைவினைவிகுதி குன்றிநின்றது

திருநீல கண்டத் திருவாணை யாண்டு
மருநீர்மை தேற்ற மதித்தோ—தெருணீர்த்

திருநீல கண்ட சிவமா மறுவே
வருமீறு தோறும் வயங்கத்—தருசீர்த்

திருப்பதிகத் தானேயத் தேயமெலாந் தீர்த்தப்
பொருட்பெருமை காட்டியசீர் போற்றி—விருப்பமிக

வங்கமர்ந்து செல்லா வயற்றலங்கள் பாடிப்போய்
மங்கையிடப் பாகர் வலஞ்சுழியிற்—றங்கிப்

பழையாறை மேற்றளிபோய்ப் பாடிப்பா கத்தா
யிழையார்முத் தங்கொண் டிறைஞ்ச—வுழையாருஞ்

செங்கையன்வாழ் சத்திமுத்தஞ் செல்காற் றிருத்தொண்டர்
பொங்குவெயில் வெப்பம் பொறுமைகண்—டங்கட்,

டிருவுளமாற் றுதென்று தேர்திருப்பட் டீசர்
வருமுனமுத் தின்பந்தர் வல்லே—தருமுறையின்

மூலமுறு நீர்சினைகண் முற்றுந் தளிர்வித்தல்
போலுலகெ லாமுய்யப் போற்றுகந்த—பாலர்

திருமுடிமேன் மேவுந் திருநிழலே யாண்டும்
விரிநிழலா யின்பம் விளைக்கும்—பெருமையதென்

றூர்க்கு முணர்த்தாங் களித்தருள வந்நிழலே
தூக்குமலர்க் குஞ்சிதத்தாட் டேநிழலா—மேற்கொண்டு [க்கு

தொண்டர்வெயில் வெப்பொழியத் தொல்லுலகிற் பல்லுயிர்
மண்டுபவ வெப்பொழிக்கு மாண்புநேர்—கண்டுறுமா

பந்தர்நீழற் கீழ்ச்சென்று பட்டீசர் தாந்தமக்குத்
தந்த சிறப்பருளே தன்பானின்—றுந்தும்

பொதுக்கருணை யாயுலகம் போற்றருமைப் பாட்டை
மதித்தெழுமன் புந்தவிரைஇ வந்து—நதிச்சடையெம்

பட்டீசர் தாணமர்ந்து பாடுந் திருப்பதிகத்
* தெட்டீசற் பாமாலைச் சீர்போற்றி—மட்டார்

மலர்ப்பொழில்கள் சூழ்துறைசை மாசிலாம ணீசர்
சொலற்கரிய தாள்பரவித் தூய—நலக்குலவாப்

பொற்கிழிபெற் றுத்தாதை போற்றுமகப் பேற்றினுக்குத்
தக்கதன நல்கிமகன் றந்தைக்கு—மிக்கமகற்

கத்தனுஞ்செ யீகைபுக ழான்றவுணர் வாழுலவாச்
சொத்தென்ப தேற்றுந் துணைபோற்றி—நித்தன்

கருப்புறம்ப யந்நீக்கிக் கண்ணுதலோன் வாழுந்
திருப்புறம்ப யந்நோக்கிச் சென்று—விருப்புறம்பொ

ருலவாய் போந்துமணத் தாலவாய்ப் பற்றுவலென்
சிலவாய் நின்றுசெறி செல்வணிகன்—பாலவாய்க்

கூடவரு கன்னிகையக் கூடலுறு முன்னுங்குக்
கூடலுறப் போய்க்காள கூடமென—வாடலுறு

மாவிடத்தா னவ்வணிகன் மாண்டுமெவற் றீண்டுவது
மோவிடத்தான் பாங்கினழு தோலமெனக்—கூவிடத்தா

* தெட்டு ஈசத்பாமாலை எனப்பிரிக்குக.

னந்நிலையே சென்றுங் கருட்கணக் கொன்றனே
யன்னிலைய நஞ்சுகுதித் தாங்கோட—நன்னிலைசார்ந்

தாங்கெழுந்து வீழ்ந்திறைஞ்சு மவ்வணிக னுக்குமவன்
பாங்குறுமா மன்மகளப் பைந்தொடிக்கு—மோங்குமணம்

வன்னி கிணறிலிங்கம் வாய்மைச்சான் றாகவங்கண்
மன்னுவித்த பேரருளின் மாண்போற்றி—பன்னுந்

தருமபுரத் தியாழ்ப்பாணர் தாய்மரபோர் தம்மா
லருண்மலர்தே வாரத்தி னன்ற—பெருமை

யிசைக்கருவி யான்மற் றெவரு மளவிட்
டிசைக்கருமை யோர்ப்பா னிசைத்தல்—விசைக்கோல்

விடையவனே வாங்கி மிகநல்ல வீணை
த்தடவு தொழில்புரிந்து தந்தாங்—கடையும்வகை

பாடுவிப்பா யென்றருளப் பற்றியதைப் பாணர்கையிற்
கூடுவித்த வின்பக் கொடைபோற்றி—நாடுந்

திருநீல நக்கர் திருமா ளிகையிற்
றிருவா ரமுதுண்டு தெய்வத்—திருநீல

கண்டயாழ்ப் பாணரிந்தக் கங்குலிடைத் தங்குதற்கோர் [த்
* கண்டருகென் றோதியவர்க் காண்டதுமேற்—கொண்டமக

தங்கி வலஞ்சுழித்தங் கார்த்தெழனேர் கண்டெவரு
மிங்கிதன்றோ வற்புதமென் றேவியப்ப—துங்கணுறீஇச்

---

* கண் இடம்.

சாதியல வீட்டின்ப சாதனமெய்ஞ் ஞானசிவ
நீதியொன்றே யென்வாய்மை நேர்விளக்கிப்—போதநிலை

நீலநக்கர் சீர்வயக்கி நீள்சாத்த மங்கைவிழிப்
பாலநக்கர்ப் போற்றும் படிபோற்றி—சாலமிக்க

கோத்திருச்செங் காட்டங் குடிக்கணப தீச்சரத்தெந்
தீர்த்தனைப்பா டெங்காற் சிறுத்தொண்டர்—நார்த்த

திருத்தொண் டருமை திகழ்த்திச் சிவமாம்
பொருத்தந் தெரித்தநிலை போற்றி—சிருத்தன்

மருகல் வணிகப்பெண் மாதிடத்தான் றன்னை
யுருகன் பினேவிட் டெதி—செருகுஞ்

சடையா யெனவுஞ் சரணீ யெனவும்
விடையா யெனவுமறை மெய்தேர்—தொடையர்

யெனவுங் கலுழ மிசைகேட் டிரங்கி
யனகன் சிவன்செய்தா னோத—லினிதுணர்த்தாங்

குற்றவிட நீக்கியவ் வொண்டொடியக் கொண்கன்கை
பற்றமணப் பித்த படிபோற்றி—கற்றைமதி

வேணிபுக லூர்வரவி மேன்முருக னூர்பெருமை
வாணிபணி வாக்கிலமைஇ மற்றவ்வூ—ரேணியணித்

தப்ப ரெழுந்தருளு மார்வமோர்ந் தன்புறச்சென்
றப்பரே நீரிங் கணைந்தருளு—மிப்பெரிய

வாரருளின் பேறுடையோ மென்றுடனு மன்பரையுஞ்
சார விளப்படுத்தித் தாணமந்தப்—பேரரசு

முன்னிறைஞ்ச மேலெடுத்து மூதிரைநாட் சீர்ப்பதிக
மன்னிலையே கேட்டருளி யாரூர்க்குச்—சென்னிலைய

காதனனி யீர்ப்பநின்றுங் காதலர்க டாதையரை
யாதரவின் யாதுங்கேட் டாற்றலே—நீதியெனும்

வாய்மை யுணர்த்த மதித்தோவா ரூர்க்கரசைப்
போய்வருமா கேட்டெல்லை புக்கருளித்—தூய

சிவகணங்க டோற்றுஞ் சிவபுரமென் றேகை
குவிமலர்தூய்ப் பாடிப்பூங் கோயி—லுவகைமிகச்

சென்றெதிர்கொள் வார்முன் சிவகணமென் றெண்ணியாங்
கின்றெம்மை யேன்றுகொண்மோ வெந்தையென—நன்றுவி
[ளுய்த்

தேவா சிரயன்முன் சென்றிறைஞ்சி யுட்புக்கு
மூவா முதல்வனுர் முன்பணிந்து—தேவாரம்

பாடியமர்ந் தப்பர்பாற் பற்றுமுள முற்றீர்ப்யத்
தேடிநெறி சென்று திருப்புகலூர்—நாடிவரு

மப்பருடன் சார்ந்தாங் கமர்ந்தவணின் றேகுங்கா
லப்பருட னுய்வருத லாற்சிவிகை—யிற்புகுதா

தேகுதல்கண் டப்ப ரிதயநெகிழ்ந் தீசருமக்
காக வளித்த வருண்மறு—தேகுகெனு

மாணை கடத்த லரிதாக வப்பர்நீர்
பேணுதல முன்சென்றுற் பின்படியேன்—காண

வருவலென வேண்டியதின் வாய்மைபல காட்டும்
பொருவி லருணிலைமை போற்றி—தருநெறிசென்

றம்பர்மா காள மணைந்தப்ப ரோடிறைஞ்சிச்
செம்பியர்கோன் செய்கோயில் சென்றருளி—முன்பரவிச்

செங்கணனூர் மேன்மை திகழ்த்தியக் கோயின்முன்
றங்குபெருஞ் சொற்புணர்த்த சால்போற்றி—யங்கட்

கடவூர் பரவிக் கலையர் விருந்தேற்
றிடமார் திருவீழி யெய்தி—விடையான்

படிக்காசு வாசியறப் பாடுபெற் றப்ப
ரடிக்காற்று கைத்தொண் டதிகப்—படிக்கா

மியல்விளங்கப் பல்லா யிரவர்க் கமுத
நயன்விளங்கத் தந்ததிற்பின் னாட்செய்—செயல்விளங்கு

நல்லூர்ப் பெருமணத்தி னல்குபர முத்தியைமுன்
பல்லூர்க்குந் தேற்றும் பயன்போற்றி—சொல்லூர்

மறைக்காட்டெம் மான்றிருமுன் வந்தப்ப ரேயித்
திறற்காப்பு நீக்குகெனத் தெய்வ—நறைக்காலும்

பண்ணினே ரும்மொழியா ளென்றெடுத்துப் பின்னயங்க
ளுண்ணிறையப் பாடியரு ளுங்காலக்—கண்ணுதலோன்

சிந்தைமகிழ்ந் தவ்வசமாய்ச் சேர்தலினாற் செய்யகத
வந்திறவா மைசோக்கி வாகீசர்—முந்து

மிரக்கமிலீ ரென்றுரைத்துப் பாடுதல்கேட் டீசர்
சரக்கத் திறப்பிக்கத் தாஞ்சென்—றுரைக்கு

ளடங்காது நின்று மகப்பட்டுத் தஞ்சொற்
கடங்கிரின் முனே யடுத்து—நடங்காணுஞ்

சேவடிக்கீழ்த் தாழ்ந்து திளைத்துப் புறம்போந்து
நாவரசர் காப்பு நவிற்றுகெனப்—பாவித்

சதுரமறை யென்றனுமத் தண்மொழிகேட் டாணை
யிதுவென்பான் போற்காப் பியற்றக்—கருமென்

றருட்பெருமை யோர்ந்தவ் வருட்பதிகப் பாட்டுந்
திருக்கடைக்காப் பாற்றுசீர் போற்றி—விரிக்கினிதி

லாரியரா னான்கு மனைத்தும் பசுபதியென்
றோரியலு மாபதியா மொண்சிவனை—நாரியலும்

பேரறிஞர் முன்மறைக்கும் பெற்றியதன் றென்பதுவு
மோரறிவின் மற்றையர்பா லோமறைக்கு—நீரினதே

யென்பதுவும் யாரு மிகப்பருமவ் வாணையினை
மன்பெரிய செந்தமிழே மாற்றிவிடு—மென்பதவு

மப்பர்சிவ மாண்பொருளை யார்க்குந் திறந்தளித்தார்
தப்பில்சிவ பக்குவர்க்கே தானுரிய—தப்பொருளென்

றேய திருமகனா ரீங்கடைத்தா ரென்பதுமுன்
னாயவுண்மை தேற்று மருள்போற்றி—தூயசிவ

சித்தாந்த வாய்மைத் திருவார் மதுரையினிற்
சித்தாந்த சைவகுல தெய்வமா—யுய்த்தாளும்

பூழியர்கோ னேனைப் புறமதம்பாற் றிச்சைவ
வாழிசெயத் தம்பநிறூஉ மாவுளங்கொள்—பாழிவிடை

யானருளாற் செய்வகைக ளாங்கிடையே தப்புதலா
வீனவம ணேபரவு மேதங்கண்—னேஞ்

சகியாது சைவத் தனிவிளக்காம் பெண்ணு
யகியார்சீ காழி யதனுண்—மகியாவு

முய்யவரும் பிள்ளைசெய லோர்ந்து திருமுலைபால்
பெய்யவருள் பிள்ளையினும் பேணிமிகச்—செய்யகோற் *

சைவச் சுடர்விளக்குஞ் § சான்றமைச்ச ரோகொய்த்
தெய்வச்சம் பந்தர் திருமுன்னீ—துய்வித்து $

முய்விக்கு மப்பெருமா னேங்கருளென் றேதுணிந்தாங்
கெய்விப்பா னேவுமன்ப ரேகிநமந்—தவ்விண்ணப்

பஞ்செய்து கைகுவித்தோர் பானிற்ப வாங்கிருவர்
தஞ்சுகமுன் கேட்டருளுஞ் சால்போற்றி—யுய்ஞ்சுலக

மீடேற வேண்டி யெழுந்தருள வப்பரவண்
பீடேறத் தேற்றுநராய்ப் பிள்ளாயந்—நாடேற

வேண்டா வெனமறுத்து மிக்க விடத்திடித்த
லாண்டாருங் காண வறைந்தருளி—யீண்டே

யிருக்க வெனுங்குறிப்பா லெண்ணரும்பே ரன்பின்
பெருக்க நனிதிகழப் பேணு—முருக்கமொழி

கேட்டருளி வேயுறுபாக் கேட்பிக்கக் கேட்டரசு
மீட்மெரு தாங்குடனுய் மேவுதல்கண்—டேட்டுமலர்ச்

சேவடியிற் ருழ்ந்துதனிச் செல்லவுடன் பாடுபெற்றந்
நாவரசை நிற்பித்து நாடிச்செல்—லாவயினிற்

---

* ஆலுருபு தொக்கது. § பெயரெச்சத்தகரந்தொக்கது.
$ செல்விப்போம்.

செய்வண் செயற்கிசையச் சேவுயர்த்த வெண்ணீற்றுச்
சைவனருட் கோலந் தனையுன்னித்—தெய்வச்

சிவிகை தனில்வீற் றிருந்தருளிச் சேணும்
புவியுமுயச் சென்றருள்சீர் போற்றி—சிவன்மதுரை

யேணியணித் தாகச்சென் றிம்பரல வும்பருநேர்
காணியவோர் தண்பாற் கடலமுதஞ்—சேணெழுபு

தோன்ற வதனுட் சுவையுமிளந் தோன்றலுரு
வேன்றிலகு மாபோ லெழுந்தருள—வான்றமணிச்

சின்னஞ் சிவசமயந் தேசமெங்க ணும்விளங்கப்
பன்னுசிவ சூனுவாம் பானுவந்தான்—மன்னுதிருத்

தென்பாண்டி நாடு சிவலோக மேபுவியி
லென்பான்மை தேற்று மிறைவந்தான்—மன்பார்செய்

புண்ணியன்வந் தான்சைவ போதகன்வந் தான்வேத
கெண்ணியன்வந் தானென்று கேட்பிக்குந்—தண்ணியநற்

சீரொலிமுன் னும்பஃ றிறத்தா லுணர்ந்தவர்சொல்
பேருவகை கேட்டெம் பிராட்டியா—ரோரமைச்சர்

தம்மைத் திருஞான சம்பந்த வாழ்வையெதிர்
கொண்மினென் றேவக் குலச்சிறையா—ரிம்மெனநேர்

சென்று திருஞான சம்பந்தச் செம்மணியின்
மன்றன் மலர்த்தாள் வணங்கா—முன்றவமென்

செய்தனமென் றின்பந் திளைத்துத் திருத்தொண்ட
ரெய்தவிடை யிற்சிவிகை யில்விளங்கு—தெய்வத்

திருவிளங்கோ லம்பஃ றிருச்சின்னத் தின்பே
யருளுமொலி கண்டுகேட் டன்பு—பெருகநில

மீதுபணிந் தாங்கமரும் வேட்கைதெரிந் துண்மகிழ்ந்து
சீதவன சம்புரையுஞ் செங்கரத்தா—லாதர

மேலெடுத்துப் பாழ்ஞ்சமண வெங்குழியின் வேந்தையினி
மேலெடுத்தல் காட்டியருண் மேலெடுத்தல்—போலடுத்துச்

செம்பவள வாய்மலர்ந்து செம்பியர்கோ மான்மலர்ப்பூங்
கொம்பனைய தெய்வக் குலமகளார்க்—கும்பரனன்

பென்றுந் திருந்துசிந்தை யீருமக்கும் வாலிதே
மன்றனரு ளென்றனைய வாய்மொழியிற்—றுன்றுபல

தேற்ற மூதனயங்க டோர்ந்தறிஞர் கொண்டாடிப்
போற்ற வருளுநயம் போற்றியெதிர்—தோற்றுந்

திருவால வாய்வினவிச் செப்பருட்பாத் தோறும்
பெருவாழ் விருவரையே பேணித்—தருவானத்

தூலலிங்க நேரிறைஞ்சித் தூயதிருச் சந்நிதியின்
மூலலிங்க முன்னின்ப மூழ்கியெழூஉச்—சீலலிங்க

முற்றுமுரு வாகி முளைத்தனைய மானியா
ரற்றமுணர்ந் துச்சிமுகி ழஞ்சலியோ—டுற்றொருதுங்கி

நின்றோர்வந் தாங்கந் நிலையி னிகேதனமீ
தென்றோர்த லாதி யியல்பயர்ந்து—முன்றூழச்

செய்கமலத் தாளிணைநேர் செல்சமய மந்திரியார்
தாயினையுங் காட்டுமொரு தாயாகத்—தூய

வளவர் குலக்கோ மகளா ரிவரென்
றளவே விரைய வவரு—முளமே

தனியாது சேவடியிற் றாழமலர்க் கையா
லினிவேந்து கூனிமிர்த்த லிவ்வா—றெனவோர்வான்

றுங்கி யெடுத்தருளக் சந்நிதிநின் றெம்பதியும்
யாங்களுமுய்ந் தாமென் றியம்பமகிழ்ந்—தாங்கருளித்

தெய்வத் திருமடத்திற் சேண்வீற் றிருந்தருளுஞ்
சைவத் திருக்கோலச் சால்போற்றி—யுய்விலமண்

பாதகர்தஞ் சார்பு பழிபட் டழியுமென்றற்
கீதொருசான் றாகு மெனமுன்செய்—சாதனைகண்

முற்று மொழிந்து முருட்டமணர் கைக்கொடுந்தீப்
பற்றுவிப்ப முக்கட் பரஞ்சோதி—பெற்றமகன்

றன்பா லெதுபுகினுந் தன்மயமே யாமிதுமெய்
யென்பான்மை யோர்த்தாங் கெரியொளிகண்—டன்பாலச்

செய்யொளிய மண்மாசு தீர்க்கமனே தீக்கையர
சுய்யவரு தூய்மைசெய்கென் றுன்னிமேற்—பய்யவே

யென்றருளும் பொன்மொழியி னேகார முன்னயங்கண்
மன்றவருள் செய்த வளம்போற்றி—சென்றச்

சுசியிதுகா றுங்கோன் சுசியிலமண் சார்வாற்
சுசியிலனுய் மேவுதலாற் றுன்னிச்—சுசியுடையா

னுக்க வடுத்தாங் கரசுடலை வெப்புநோ
யாக்கவர்த லோர்ந்திருவ ராங்கெய்தி—நோக்கு

மிதம்பகர்ந்து சம்பந்த ரீண்டெய்தி லிந்நோ
யதம்படமீ தொன்றோ வளவா—முதம்பெருகு

நன்றெனவச் சம்பந்த நாமமகா மந்திரமுட்
சென்றளவே யந்நோய் சிறிதகல—நன்றிதென

வோர்ந்திசைய வேந்தாங் குவந்திருவ ரும்விரைந்து
சேர்ந்திறைஞ்சி வேண்டத் திருவருள்கூர்ந்—தீர்ந்தண்மதிச்

சென்னியருண் முன்னிட்டே சிவபர தந்திரர்க [யே
ளென்னவுஞ்செய் தன்முறையென் றேயுணர்த்த—முன்னி

நோக்கவிதி யில்லமணே நோக்கிவா தாடுதற்கு
மூக்கமிக வென்றழித்தற் கும்முளமே—தேக்குதிரு

வாலவா யில்லுறையெம் மாதியே நின்புகழே
ஞாலமிக வேண்டுமெனு நார்போற்றி—வாலொளிய

வண்சிவிகை மீதிவர்ந்து வந்துதிரு நோக்கருளி [ணி
மண்சுவன்மேல் வைத்தோம்பு மன்னணித்தா—யொண்சென்

மாட்டுயர்பொற் பீடத்து மன்னிச் சுகாசனமாச்
சூட்டுந் திருவடிதீக் கைதொடக்கி—வேட்டுத்

திருவால வாயரன் றிருநீறென் றோதித்
திருவா சகதீக்கை செய்து—வருநோய்முன்

வெப்பகல வெண்ணீறு மேனிதீண் டிப்பூசி
யப்பரிச தீக்கைபுரிந் தப்பதிகத்—தொப்பில்

பரையின் வரலாறு பகர்முறையிற் பாசப்
புரையிலோர் வித்தொழித்தல் போற்றி—யரசியரா

மங்கையர்க ளுயகியார் மாத ரிளங்கோலத்
துங்கரிலே தேற்றத் துணிந்தருளி—யங்க

ணருளரசின் முன்சொற் றருள்குறிப்பை நோக்கி
யருள்பதிகங் காம்பீரி யாதி—பொருணயங்கள்

பற்பலவுந் தோன்றப் பசுவியலோர் வித்தொழிப்பான்
முற்பகரும் வாய்மை முறைபோற்றி—யற்புமிகூஉ

வேந்தும் வசமாகி வெண்ணீற்றுத் தூநெறியே
சார்ந்துநிற்ற லோர்ந்துந் தமிழ்வேத—மார்ந்த

மறையாங் கரும்புண் மறையிரத மாகி
நிறைவான் பொருள்வடித்து நேரே—முறையே

விளக்குசிவ முன்னூலென் மேன்மையுல கெல்லாம்
விளக்குந் திருவுளத்தான் வேந்தி—னுளக்கோ

ளுணர்ந்துஞ் சமணர்கள நீதி யுளக்கோட்
கிணங்கியெரி மேனி யிடப்பான்—மணங்கொண்டு

பச்சையாய் நிற்கும் பரமசிவை நாமந்தன்
னிச்சையாற் றேன்றுதிரு வேடெடுத்து—முச்சகமு

மற்புதங்கண் டேத்தவழன் றண்டரிமிர் செந்தழலி
னிற்புகுத்தி யீசனிடத் தீசையுரு—விற்பொலிதல்

வேத்தவையின் வல்லமணர் மெய்விதிர்க்கு மாவிளக்குஞ்
சீர்த்திதிகழ் வாய்மைத் திறம்போற்றி—பேர்த்தும்

வெருவாது போலமணர் வேகநீர்க் கேடு
தருவாது வேட்பவரு டந்து—வருவாதுந்

தோற்றூற்செய் தண்டந் திலக்கிச்செய் கென்றமைச்சு
ராற்ற லுரைப்ப வமணர்சினத்—தேற்றூரா

யேறுதும்யாம் வெய்யகழு வென்றேதம் வாயினு
லூறுசெய்கூ பங்கெட் டொழிந்தாங்குக்—கூறுதல்கேட்

டங்கட் சிவிகை யதன்மீ தெழுந்தருளித்
திங்கட் குலவேந்தர் தேவியார்—துங்க

மதியமைச்சர் சூழ்ந்துவர வல்விரைசெல் வைகை
நதியருகர்ச் சாங்கால கண்ணும்—விதியருகர்

கூட்டங் குலேயக் கொலுவீற் றிருந்தருளி
யீட்டுவினே யொப்பாதி யெய்தரசின்—றேட்டநிறை

தோங்குபரி பாகத்தி னுண்மையுப தேசமதா
யாங்கரசோர் கென்றே யருள்பதிகம்—பாங்கிற்

பதியியலோர் விப்பான் பதியருணூல் வேதங்
கதிதருநா லேழா கமமே—துதியவற்றுள்

வேதமுல கோர்பொதுவா மெய்யாக மஞ்சத்தி
பாதர்சிறப் பாய்ச்சிவமொன் றேபதிமற்—றோது

மனேத்தும் பசுபாச மாமகன்றூர் வீட்டின்
பினேத்ததுசார் மார்க்க மினேத்தென்—றெனேத்து

மயங்கவைத்தோ சாது மறைப்பொருள்வா யாண்டும்
வயங்கவைத்தே காட்டியருண் மாண்பி—னயங்கள்வைத்தே

மெய்ந்நெறிச்சை வந்நெறியே மேவியன்முத் திந்நெறிமற்
றெந்நெறியுஞ் சோபானத் தின்னெறியாத்—தன்னு

ளடங்குபுகீழ்க் கீணிற்ப வாங்குச்சி மேனின்
றிடங்கொடுத ஸ்ரீஇயரசா யென்றுந்—திடங்கவினுஞ்

சுத்தாத்து விதசைவத் தூயசம யாதீத
சித்தாந்த மேன்மையே தேற்றுமென—லுய்த்தோர்வா

னுண்மைப் பொருள்பலவாழ்ந் துவ்விரியச் செவ்விதருள்
வண்மைத் திருவாய் மலர்போற்றி—தண்மைத்

தமிழ்மொழியே வென்றேறச் சைவமுல கெல்லா
மமிழ்தினுமேற் கொண்டேற வன்பர்—கமழ்வாய்த்

துதியேற வப்பதிகத் தூயதிரு வேடு
நதியேற நாற்பாதர் நாலாங்—கதியேறத்

தேர்ந்துயிர்கள் வேத சிவாகமங்கண் மிக்கேற
வேந்தனு மோங்குகவென் மெய்ம்மொழியால்—வேந்துபுறக்

கூனிடையே மாறுமகக் கூனுடன்சை வந்நீதிக்
கூனிமிர்ந்தாங் கேநிமிர்ந்து கொண்டேற—வீனநெறி

மாறுபுசை வந்நெறியே மன்னிநிமிர் வண்மைநெடு
மாறரெனு மந்திரப்பேர் மாண்பேற—வீறுபவத்

துன்பக் கடனின்றுந் தொல்லுலகெ லாமேற
வின்பக்கை நீண்ட விசைபோற்றி—மன்பெற்ற

ஏரேடு நிற்பான் றிருவே டகம்பாடி
நீரோடு வந்தெடுத்து நின்றமைச்சர்—நாரோடு

சென்னியில்வைத் தின்பந் திளைத்தெடுத்துக் காட்டியவாங்
கின்னருள்செய் தேற்ற விசைபோற்றி—பின்ன

ரடாஅ தமண்பாவ மாங்கழுமி தேற்றத்
தடாஅ திருந்த தயைபோற்றி—விடாஅ

வரசரசி யாரமைச்ச ராயபெரு மக்கள்
விரவுயிருக் குள்ளுயிராய் மேவித்—திருவருளன்

போர்நாளு மோங்க லுறவீற் றிருந்தருளுஞ்
சீர்நாடு கேண்மைத் திறம்போற்றி—நீர்நாடு

பார்விளங்க நோற்றசிவ பாத விருதயனார்
பேர்விளங்கு செய்மைப் பிரிவாற்று—நார்விளங்கக்

* கூடலிரித் தோரின்பங் கூடலுயிர்க் கீந்தருளுங்
கூடலிலே வந்துதமைக் கூடலுறத்—தேடலுணர்ந்

தேகிவிரைந் தாங்கடிவீழ்ந் தேத்துமவர்ப் பார்த்துரிமை
யாகிவரு பாலளித்த வன்னையுடன்—பாகத்

திருத்தோணி யப்பரமர் சேமம்விசா ரித்தாங்
குரித்தோவாச் சேயென்னு முண்மைக்—கருத்தோர்ந்

துலகெலா முய்பொருள்வைத் தோதும் பதிகப்
புலநிலாம் பேரருட்சீர் போற்றி—யலகிலா

மல்வேலி வேலியாய் மல்கிப் பெருகுதிரு
நெல்வேலி சென்றருளி நெல்லையப்பர்—வில்வேலி

மாதிரங்கொள் பொற்கோயில் வந்து மருந்தென்னும்
பாதிரங்கும் வெய்ய பவமருந்தென்—றேதிரமா

---

* கூடு அல எனப்பிரிக்க.

நின்றுலக நாவாய் நிறைதரக்கொண் டுய்வா
னன்றருளிச் செய்த நலம்போற்றி—யன்றுமல

யாசலத்து மேவு மகத்தியனுர் நம்மிதயத்
தேசலர்த்தி யாண்டருக தேசிகனம்—மாசகத்து

மாந்தருய மாந்தரினோர் மைந்தனென வந்தவனித் [ஞ்சித்
தேந்தருவார் நெல்லையினிற் சென்றிருந்தான்—போந்திறை

தெய்வத் தமிழ்மறையுட் செம்பொருளுந் தேர்ந்துநனி
யுய்வைப் பெறுதுமென வுன்னியன்—பைவைத்த

சிந்தைசெல முன்பீர்த்துச் செய்யவருள் பின்னுந்த
வந்தனைய சேயிளைய மாண்புருவுங்—கந்தனென

வேதேற்ற விஃபுததி யின்மூழ்கிச் சேவடிமென்
போதேற்ற சென்னியராய்ப் பூண்டிறைஞ்சி—மீதேற்று

செங்கை குவியநின்று தேவநா மச்செழிய
னங்கிறைஞ்சி வேண்டுதல்கேட் டைந்திரவிற்—சங்கையுறு

கையான பக்குவர்க்கே கட்டிவிடு மந்நூலை
மெய்யாகக் கொண்டொழுகும் விண்டுமெதப்—பொய்யாளர்

செய்கைமருந் தென்னுந் திருப்பதிகச் செம்பொருள்க
ளுய்கையுற வோர்ந்துவிரித் தும்மாற்றி—மெய்கைப்

பொருளிற் றெளியப் புணர்த்தவவர் சைவத்
தெருளிற் புகுந்துய்வான் செய்பே—ரருளிற்சார்ந்

தாளாகிச் சூழ்ந்திறைஞ்ச வவ்வழுதி போற்றெடுப்ப
வாளா வமர்ந்தகொலு மாண்போற்றி—நீளார்வச்

சீரமரும் பாண்டித் திருத்தலங்கள் பற்பலசென்
றூரருள்வாய் மைப்பதிக மாங்கருளி—நேரில்

குலச்சிறையார் தம்மணமேற் கோடிநகர் போக்தந்
நலத்துறையார் வேண்ட நயந்தத்—தலத்துறைந்து

சென்னிநாட் டேகுந் திருவுளக்கு றிப்போர்ந்து
மன்னரசர் மானியார் மந்திரியார்—பின்னு

முடனும்பே ரன்பி னுருக்கநேர் கண்டுந்
திடனும்வெண் ணீற்றுநெறிச் செங்கோல்—கடனுப்

பாதுகாத் துய்மின் பரியன்மி னின்மினென்ற
சீதவாக் கின்பத் திறம்போற்றி—பூதஞ்

சிறுதரும்பி னல்வலிய தேவர்வலி யெல்லாங்
குறுகுவித்த தந்தை குணம்போன்—மறுகுபுனல்

வேகவதி வேக விறலடங்க வந்திரும்பே
யாகநிகர் சீரே டருட்கரத்தாற்—போகவெதிர்

தூச்சருவ சத்தித் துவம்விளங்க முன்னுய்த்த
வாச்சரிய மீண்டும்வெளி யாகவோ—மீச்சென்

றிருகரையு மோதிமிக் கேகுபெரு வெள்ளப்
பொருகரையி லாவேகப் பொற்போர்ந்—தருகரைக்க

ணத்திலோ டத்திருத்தி நல்லார்பல் லாயிரரை
யுய்த்தருளுங் கீர்த்தி யொளிபோற்றி—புத்தநந்தி

யத்திரவாக் காற்சென்னி யற்றெழிந்துஞ் செல்சாரி
புத்தனெதிர் வாதம் புரிவித்தாங்—கத்தொகைய

சாக்கியரெல் லாம்பதத்திற் சார்ந்திறைஞ்சச் சைவமகா
பாக்கியராய் வாழவருள் பண்போற்றி—தேக்கியசீர்ச்

சீகாழி யம்மையப்பர் சேவடிபோற் ருதரவின்
வாகீச வப்பரையுள் வாஞ்சித்தே—மீகாதன்

முந்த வமர்கடவூர் முன்னியவ ணின்மைதெரீஇ
யந்தில்வினயப் பூந்தருத்தி யண்மிவிரைஇ—வந்தருளுஞ்

செய்திவா கீசத் திருவடிக ளோர்ந்துடனுங்
கெய்திமறை வாய்ச்சிவிகை யாஞ்சுமத்த—லுய்திறனென்

றேற்திருத்தோண் மீதிருத்தி யேகுங்கா லெங்குற்ரு
ராதரத்தெ மப்பரென வாங்கவர்க்காண்—மாதர்மிக்கு

நீடுதலாற் காலம்பா ணித்தல்சிறி தாற்ருமற்
றேடுதனேர் காணவருள் சீர்வினவிக்—கூடுமெப்ப

ரிங்குற்றே னுந்தா ளிணைசுமக்கும் பேறுபெற்றே
னுங்குற்ருே வாமற்செ யுந்திருத்தொண்—டங்குற்ருேர்

தம்முடனுத் தூய தவம்பெற்றே னென்றருளுஞ்
செம்மொழிமுற் றும்முன் சிவிகையினின்—றிம்மெனக்கீ

ழேகுதியா வீழ்ந்திறைஞ்சி யெம்மடிகள் செய்ம்முறையீ
தாகுமதோ வென்றென் றருண்முனமவ்—வாகரசும்

வீழ்ந்திறைஞ்ச விவ்வாறு மிக்கருளன் புட்கலந்து
வாழ்ந்தின்ப வாரிதிதோய் வாயிருபாற்—சூழ்ந்ததிருத்

தொண்டரெலா நேர்கண்டு சொல்லரும்பே ரானந்த[மெலாஞ்
வண்டுறைதோய்ந் தேத்துரிமை வாழ்த்தொலியவ்—வண்ட

சென்றேறக் கோயில்புகூஉச் சீரே றருட்பதிக
நன்றேறப் போற்று நலம்போற்றி—வென்றேறு

சைவம் விளக்குந் தனித்தூண்டு கோலாகிக்
கைவந்த மந்திரியார் கற்பரசத்—தெய்வமங்கை

யர்க்கரசி யாரன் பருமைவிளு யாங்குநா
விற்கரசு சென்றருள வேணுபுரம்—புக்கருளி

யம்மையப்பர் தாள்பரவி யாங்கமர்ந்து நாவரசா
மிம்மையப்பர் பூந்துருத்தி யில்லுரைத்த—சும்மையப்ப

ரோத்தூரி லாங்கொருவ ருக்கெளிது காட்சியளித்
தேத்தூர் பரமபதி யாந்தனியல்—போர்த்தாங்கவ்

வாண்பனையைப் பெண்ணுக்கி யங்கியகர் மாமுத்தி
மாண்பருளிக் கர்த்திருத்து வம்பதக—வீண்பொய்ச்

சமணறவொன் ருற்ருவ கர்த்திருத்து வம்மென்
றமைவுறமூன் றுஞ்செய் தருளி—நமையாள்

பதியசையாத் தாணுவே யாமப் பதிசந்
நிதியிலெவை யும்மசையு நீர்மை—துதிபெறவே

யச்சமணர் மெய்ச்சைவ ராகியடி வீழ்ந்திறைஞ்ச
நச்சியருள் செய்த நலம்போற்றி—கச்சிமதி

வேணியே கம்பர் விரைமலர்த்தாள் போற்றியருள்
வாணிமலர் சாத்தியருண் மாண்போற்றி—பேணுசிவ

சாரூபம் வேண்டித் தவம்புரிந்த மாதவனேர்
காரூர் திருமிடற்றே காம்பரனு—ரேரூர்

விடைமீது வந்துநீ வேண்டுசா ரூபந்
தடையேது மின்றித் தருவான்—படைவேற்கைச்

சேயவனங் காழித் திருஞான சம்பந்த
ஞயதவஞ் செய்திங் கமர்தியென்று—போயருள

வரணைசிர மேற்கொண் டருட்காஞ்சி மேற்றளியில்
வேண்ஞான சம்பந்த மெய்ம்மநுவே—நாளுஞ

மோதி யருந்தவஞ்செய் துற்றிருந்த நற்றவஞு
மாதவனோர் வந்தருளி மற்றவன்பூம்—பாதமுற

வீழ்ந்திறைஞ்சி வேண்டும் வியன்சிவசா ரூபமுட
னீந்துசிவ லோகமுய்த்த வேர்போற்றி—போந்து

திருவாலங் காடணுகச் சென்றயன்மால் காணுப்
பெருமானு மம்மையென்றே பேண—வருபாட்டி

தன்றலையாற் சென்ற தலநா மிதித்தறகா
தென்று பழையனூ ரெய்தியமர்ந்—தன்றமலன்

கற்ரு வெனவருட்பால் கால்பாய வல்விரைந்தாங்
குற்ரு ரருட்காட்சி யோகைதரப்—பெற்ருேவாப்

பேரருளின் மேன்மை பிறங்க வருட்பதிக
நாரருமை காட்டு நலம்போற்றி—நேரருஞ்சீ

காளத்தி மாமலைமேற் கற்பகத்தை யற்புதத்த
காளத் திருமிடற்றெங் கண்ணுதலை—நீளத்தி

யானமுறச் சென்றருளி யாற்றரசாம் பொன்முகலி
மாநதிவ ணங்கியடி வாரத்தின்—பானமர்துட்

புக்கிறைஞ்சி வேறன்றாய்ப் போற்றுசிவ மன்பென்னு
மிக்க பொருளுருவாய் வெவ்வேறா—யக்குலத்திற்

கண்ணருள்கூ ரின்புருநில் கண்ணப்ப வென்றனைய
கண்ணகழ்கைப் பற்றியம காலிங்க—வண்ணலுரு

வென்படிவாய் நிற்கின்ற தென்றுளங்கொண் டெல்லையில்பே
ரன்புருவை மூன்றாழ்ந் ததனுளமர்ந்—தின்பருளி

மேவுசிவ லிங்கவுரு மேற்றாழ்ந்தா னந்தநிறை
பாவருளிச் செய்த பயன்போற்றி—மூவுலகும்

போற்றுந் திருமயிலை போந்து சிவநேச
ராற்றுந் தவத்தி னருளுருவாய்த்—தோற்றியருள்

பூம்பாவை பொன்மேனிப் போற்றடலை யென்பினையப்
பாம்பா ரணியினர்க பாலீசத்—தோம்பா

வநாசார மின்றென்றே யாங்குகொணர் வித்தப்
பிநாகி திருவருளே பேணி—மநாதிகளுக்

கெட்டாத சர்வசத்தி யாவருக்கு நேர்விளக்கித்
துட்டார் சமணர் துணுக்கெய்திக்—கெட்டோட

நெக்கெழுமப் பாத்தோறு நேரிழையன் னுண்மகளா
மிக்குரிமை யாலழைக்கு மெய்யருள்கேட்—டக்கணமே

செங்கை குவித்தெழுந்து சேவடியில் வீழ்ந்திறைஞ்ச
வங்கண்மக ளென்பாங் கருள்போற்றி—பொங்குபெரு

நண்பையுறு சண்பைநகர் நண்ணித் திருத்தோணித்
தண்பரவு நெற்றியரைக் கண்டிறைஞ்சிப்—பண்பரவி

விண்செறிரு மாளிகையின் மேல்வீற் றிருந்தருளிக்
கண்செயருட் கோலக் கவின்போற்றி—வண்செய்

திருநீல நக்கர் திருமுருகர் முன்னாய்
வருவார்க் கருளியுடன் வாழ்நா—ளருணீர்மை

மன்றல்புரிஇ வைதிகசை வம்முறைவி ளக்குகென
முன்றெழுசீர்த் தாதை முதலியர்கோட்—கன்றிணங்கி

யன்ன திருமணத்தை யான்மாச் சிவத்துடனே
துன்னு பெருமணமாத் தோய்முத்தி—நன்னிலையே

யாக்குதுநா மென்றுங் கருட்டிருவு ளங்கொண்டம்
மோக்கம்பல் லாயிரர்க்கு முற்றருளு—மாக்கநிறை

மிக்கதல நல்லூர் வியன்பெரும ணம்மென்றே
யக்கவியா ணத்தினையங் காற்றலே—தக்கதென

வம்மையப்பர் தஞ்சே யடிபரவிப் போந்துபுறத்
தென்மயத்த தண்சிவிகை யேறுங்கா—றம்மைவைத்த

நண்பினினி வாராமை நாடியா ராமையினச்
சண்பை வளம்பதியைத் தாழ்ந்திவர்ந்து—பண்புறநேர்

சென்றுசிவ லோகத் தியாகேச ரைப்பாகத்
தொன்றுதிரு வெண்ணீற் றுமையுடனே—முன்றெழுது

நம்பாண்டார் முன்பார்ந்த நற்றவத்தாற் பெற்றுவக்கு
மம்பா பிரியைமண மாற்றுமனை—யின்பாங்கு

வந்தருளி யாங்குவந்து வந்துதரி சிப்பார்க்குத்
தந்தருளுங் காட்சித் தகைபோற்றி—முந்து

திருமணஞ்செய் தற்காந் திருவேட மீதே
யிருள்செற் றொளிவிளைத்தின் பீதற்—குரியதெனத்

தூயவெண் ணீற்றுடனுந் தூயவெண்ணி றக்கலனே
யாயவெலாம் பூண்வித் தருள்விளக்கு—நேயத்

திருவடையா ளம்மாலை செங்கரத்தாற் றும்பூண்
டருளுலகில் யார்க்கு மளிக்கும்—பெருமை

சிவனுந் தனக்கே சிறப்புரிமை தேற்றும்
புவனுதீ தந்நிலைமை போற்றி—தவநாக

நீலநக்க மாமிடற்று நின்மலனென் றேநினைந்து
நீலநக்க ரங்கிவினை நேரியற்ற—நீலமைக்கண்

வல்லியே நம்பாண்டார் மாமகளாய் வந்தாளென்
சொல்லிலக்குங் காதலியார் தூக்களத்தில்—மல்லற்

றிருமங்க லம்பூட்டிச் செந்தீ வலமா
வரும்ங்கட் கல்லூர் வதுபின்—புரிதல்வல்

மாற்றிப் பெருமணத்து வந்திப்ப வஞ்சமணம்
போற்றுவதன் றென்றுண்மைப் போதமுல—கேற்றுய்வான்

கல்லூர்ப் பெருமணநாம் வேண்டிற் கழுமலமுன்
பல்லூர்ப் பெருமணநம் பாட்டுக்கள்—வில்லூர்மெய்

யாயதில வாகுமஃ தன்றியுமெய்த் தொண்டர்களத்
தூயசொல்லூர்ப் பேர்மணமேற் சூடலர்க—ளாயதனு

னல்லூர்ப் பெருமணம் மேய்நம் பானேயக்
கல்லூர்ப் பெருமணம் வேண்டாவென்—றெல்லூர்

திருப்பதிகம் பாடிச் சிவமணமே வேண்டும்
பொருட்பெருமை காட்டுபுகழ் போற்றி—தெருட்பெருகு

மொண்சோதி யாங்குசிவ லோகத் தியாகேசர்
கண்சாரும் வாயிலுடன் காட்டிநடு—வண்சார்க

நீயுநின்றன் மன்றமெழா நின்றவரு மென்றருள
வாயதுகேட் டங்கணந்தி யைப்பார்த்துப்—போயுடனி

யித்தலத்தி னெல்லையுளார் யாரையுமிச் சோதியினு
ளுய்த்தியென்றே வானை யுரம்போற்றி—புத்தமுத்

மூட்டுதிரு வெண்ணீற் றுமையம்மை சேயுளக்கோள்
வேட்டுமெணிக் கோபுரநேர் மேவிநந்தி—யோட்டவரு

வார்தூர நின்று மயங்காம லேந்தெழுத்து
நீர்மூழ்கி வம்மினிவ்வெண் ணீறுகொண்மி—னேர்வாயி

லிந்நெறியே சென்மி னெனப்புகுத்த ஞானமெய்
நன்னெறிதான் யார்க்கு நமச்சிவா—யந்நிறைசொல்

லாமென் றபக்குவரு மிங்கணைவா ராதலினு
ளாழ்ந்து நூன்மரபை நாமறுக்க—லோமென்று

காதல்வாக் கேவர்செவிக் கண்ணும்போய் நண்ணுமென
வேதநான் குள்ளுயிரா மெய்ப்பொருளே—யீதென்று

தேற்று திருநமச்சி வாயத் திருப்பதிகஞ்
சாற்றுசிவ தீக்கைத் தயைபோற்றி—போற்றுசிவ

பாத விதயர் பகவதியார் நம்பாண்டா
ராதியிரு பாற்கிளைபல் லாயிரவ—ரோதுதிரு

மன்றஞெழப் பஃறேத்தும் வந்தவர்பல் லாயிரவர்
வென்றுடனும் பாணர் விறலியா—ரொன்று

திருமுருகர் நீலநக்கர் சேர்ந்திவர்கள் பாங்கின்
வருகுநர்பல் லாயிரவர் மற்றப்—பெருமணநல்

லூர்வழிச்செல் வார்நியமத் துற்றவர்கண் மற்றெவருஞ்
சார்பதிஞ ருயிரர்முற் சான்றவரு—நேர்வரிய

முத்தியொன்றை யேவேட்டு முன்ஞட் பிறதலத்தி
லத்தவஞ்செய் மாமுனிவர்க் காங்கணுகி—மெய்த்திகழும்

பொற்கடுக்கை யானீர் புகன்முத்தி நம்மிளைய
சிற்குமர னல்லூர்த் திருமணத்தில்—விற்குலவ

நல்குவான் சென்மி னயந்தவணே வைகுமினென்
சொல்குலவு சென்னியுறத் துன்னியவ—ணல்குப்பல்

தூயமுனி வோர்களுமச் சோதிபுகச் சேர்த்தருளி
மேயதிருக் காதலியார் மென்கைபற்றிச்—சேயவருட்

சோதியினுட் புக்கருளித் தொன்னிலையே துன்னுசிவ
சோதியாய் வீற்றிருக்குஞ் சூள்போற்றி—வேதமொரு

நாலின் முடிவாய் நவிலு மதர்வணமெய்ந்
நூலின் சிரமே னுவல்சிகையின்—மேலினிது

தேற்றுஞ் சிவனொருவ னேதியே யன்னென்று
சாற்றுமுடி வேநந் தமிழ்வேதத்—தேற்றமுற

யாண்டுந் திகழ்முடிவா மெய்கெனல்போன் முன்முடிப்பாய்த்
தீண்டினிமைப் பூர்வ சிகைபோற்றி—காண்டற்

கருமறைகள் சென்னியெடுத் தங்கணுல கெல்லாம்
பெருமை யுறத்திகழும் பெற்றி—மருவவிளஞ்

சேய்ப்பருவத் தேபூந் திருவணையிற் பள்ளிகொள்கால்
வாய்ப்புறமேற் றூக்குசிர மாண்போற்றி—தூய்ப்புனித

வண்மழுவர் தொண்டல்லான் மற்றிசையோ மென்றசைத்த
திண்முகப்பூ மண்டலத்தொண் சீர்போற்றி—வெண்மைத்

திருநீறு பூத்துச் சிவனேசே டித்தென் §
றொருவாப் பசுபதியென் றோர்வித்—தருளாலே

மும்மலங்கண் முக்குற்ற முக்குணங்கண் முன்னாய
வெம்மலமு நீக்கு மியல்பினையு—மம்முறையே

பாசம் பசுபதிமெய்ப் பான்மையையும் பாசவலி
வீசிப் பசுசிவமா மேன்மையையுந்—தேசு

மருவுதிரி புண்டரத்தின் மாண்பால் விளக்கும்
பொருவிறிரு நெற்றியெழில் போற்றி—பெருகுதிரு

வுள்ளத் தயைவெள்ள மோங்கிவெளிப் போந்திடற்கென்
றுள்ள மதகிரண்டென் றேதியற்றாய்த்—தெள்ளும்

பொதுவுஞ் சிறப்புமென்றே போற்றுங் கருணை
யதுவுந் திருவருளு மந்தண்—ணதிபோ

லொழிவின் றனவரத மோரிருபா லார்க்கும்
பொழியுந் திருவிழிகள் போற்றி—மொழிபலவு

§ உம்மை-தொக்குநின்றது.

மேத்துதிரு மூவா யிரமாண் டிருத்தமிழின்
வாய்த்த சிவமணமே வண்டுறைசைச்—சீர்த்தளிக்குட்

காற்றிசையிற் றேற்றுயிர்ப்புக் காற்றினனி தோற்றின்ப
மேற்றதிரு நாசி யெழில்போற்றி—போற்றுந்

திருத்தோ டுடைய செவியுன் முதலா
வருட்சேர்க்குங் காதன்முடி வாக—விரித்தோவா

தேத்துபதி னூறு யிரம்பதிக நான்மறைக்கு
ளார்த்தபொது முற்றும்வடித் தாங்கவற்று—ளோர்த்துணருந்

தூயசிறப் பாஞ்சைவத் தொன்னெறியே நன்னிலையென்
றேயுரைத்த சீர்நா வியல்போற்றி—தாயென்

றுலகெலாம் போற்றவரு ளோருயிர்த்தா யாகு
மலையெலாம் போற்றிமய மங்கை—நலமெலாந்

தந்தருள வேண்டித் தனதனஞா னப்பானேர்
பந்தமுறுஞ் சீவர் பருகிடநே—ருந்தகைய

தன்றிளஞ்சே யுண்டருளி யத்தகைய பாலுருவை
நன்றினிய பாவுருவாய் நல்கியருள்—கென்றுமுன

நல்குசிவ ஞானப்பா னூறுதிருப் பாமணமே
மல்கு திருவாய் மலர்போற்றி—வில்குலவும்

பொன்மணிப்பல் பூண்களுக்கும் பொற்புதவு மற்புதத்த
நன்மணிக்கண் டத்தெழுந்து நாமுய்ய—மன்மணிவா

யின்வருதே வார மெடுத்தீன்முதன் மூன்றேசைத்
தென்வகையுங் காட்டி யியன்முதலாப்—பன்முத்

தமிழ்விரக ரென்பெயருந் தான்விளக்கி யச்செந்
தமிழுயிர்த்தே வாரவுப சாந்த—வமிழ்தமொழி

பாசம் பசுபதிமுப் பானித் தியமுணர்த்தி
யீசன் சிவனருள்பெற் றின்புறுப—தேசநேர்

தேற்றியாங் கன்ன திருக்களத்தி லங்கிடுமுக்
கீற்றுரே கைகெழுமுங் கேழ்போற்றி—மாற்றுயர்செம்

பொன்மார்பி னீற்றியைபாற் போற்றத் துவிதநிலை
முந்நூலின் ஞானமொரு மூன்றனிலை—யின்வாய்மை

தேற்றித் திருவயிற்றிற் சேர்மடிமூன் றுலுயிர்முப்
பாற்றென்ப தோர்க்கும் படிபோற்றி—தோற்றுலகுக்

கன்னையத்தர் நாப்பணவ ரானந்த மேயுருவாய்
மன்னியிளங் கோல மழவாய—வின்னிலையு

முவ்விருவர் செய்திதம்பா லோர்த்தாங் கமுதநிறை
செவ்வியபொற் கிண்ணமிடச் செங்கரத்து—மவ்விறையை

நேருணர்த்துஞ் சுட்டுவல நீள்கரத்து மெஞ்ஞான்றுஞ்
சீருறக்கொண் டாளுந் திறம்போற்றி—பேரருளார்

சத்திநிபா தாதியரைச் சத்யோநிர் வாணுதி
மெய்த்தசிவ தீக்கை விதத்தாலே—முத்திபுகச்

சேர்த்தருளுஞ் சுத்தசிவ தேசிகத்து வவ்விளக்கந்
தேர்த்துநிரு வாணத் திருவரையி—லார்த்தமணிக்

கோவைமுதற் பல்லணிகள் கூறருமி ளஞ்சாயற்
றேவியலேர் காட்டுந் திறம்போற்றி—மேவுமிளங்

கோலத் தொடையழகுங் கூறின்முழந் தாளழகுஞ்
சீலக் கணைக்காற் றிருவழகு—மேலிட்டு

வம்மினுல கீரிம் மலர்க்கமல மென்பதமே
நும்மலநோய் நீக்கி நுவலரிய—நின்மலமெய்

யின்பத் திருத்து மிறைஞ்சிமுடிக் கொண்மினென்றே
யன்பர்க் குரைத்தாங் கருளொலிசெய்—செம்பொன்மணிப்

பாதசரங் கிண்கிணிமுற் பல்லணிகள் கல்லெனநாற்
பாதர்முடிச் சூட்டும் பதம்போற்றி—யோதுந்

திருஞான சம்பந்த திவ்வியமா மந்த்ரப்
பெருநாமம் போற்றியென்றே பேணி—லொருவாம

லென்மனமே நின்மலப்பே ரின்புறலா மன்புறச்செம்
பொன்மனமே நின்றென்றும் போற்று.

ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள்

போற்றிக்கலிவெண்பாமுற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

ஓம்கணபதயேநம:

திருப்பெருமணநல்லூர்

ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள்

# திருவூசல்.

## காப்பு.

மாமகளும் பாமகளு ஞான போத
மணமகளுங் குணமலிய வழக்கஞ் செய்பே
ருமளவில் பொருளாதி யிம்மைப் பேறு
மம்மைநலந் தருங்கல்வி யருமைப் பேறுந்
தேமலர்சுத் தாத்துவித மெய்ம்மைப் பேறுந்
திகழ்நல்லூர்ப் பெருமணத்திற் சிறந்து வாழுங்
காமருசம் பந்தர்திரு வூசல் பாடக்
கணேசனடி கணேசநிறை காப்ப தாமே.

## நூல்.

மாமருவும் வேதாந்தம் விட்ட மாக
வளமருவு நால்வேதம் வடங்க ளாக
வோமருவும் பீடமா றங்கங் கால்க
ளுண்மைமருஞ் சித்தாந்த மொண்பட் டாகத்
தூமருவுஞ் சிவஞான மணைக ளாகத்
துணைமருவுந் திருவருண்மேல் விதான மாகத்
தேமருவும் பெருமணம்வாழ் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (க)

மதியொளிசெய் வயிரமணிக் கால்க ளூட்டி
வளரொளிசெய் வனபவளச் சட்டம் பூட்டித்
துதியொளிசெய் செம்மணியின் கொடுங்கை மாட்டித்
தூயொளிசெய் தரளவடந் துலங்க நீட்டி
விதியொளிசெ யேனைமணி யங்கங் கூட்டி
மேவுதிருத் தொண்டரிரு பானின் ருட்டித்
திதியொளிசெய் பாட்டிசைப்பப் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (உ)

மாவமரு மணிமார்ப னயனிந் த்ராதி
வானவர்முன் னனவர்முன் மகிழ்ந்து போற்றும்
பூவுலகிற் சிவலோகம் வாய்மை முத்தி
புரநல்லூர்ப் பெருமணமுற் புனித மேன்மை
மேவுதிருப் பேர்கள்பல விழுப்பங் காட்டு
மெய்த்தலமித் தலமென்றே விரும்பி வாழுந்
தேவர்பணி பிரியாம்பா மகிழு நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (ங)

சகதலமெங் கெங்குமிலாச் சிறப்பீ தென்றே
சாற்ற வொளிர் திருஞான சம்பந்தஞ்சீர்
தொகும்பர் கோயினலந் தருமா லால
சுந்தரமா ணிக்கவா சகமாந் தொல்லூர்
தகுமிடபந் துரத்திசண் டேச நல்லூர்
தாமணித்தாய்ச் சூழ்நல்லூர்ப் பெரும ணத்திற்
றிகழ்தருசீர்க் காதலியார் மகிழு நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (ச)

மூவிலைய சூலத்தா லிறைவன் கண்டு
முடிப்புனலுஞ் சேர்த்தமையான் முதுபொற் கூடற்
பூவியல்பொற் றாமரைமுன் னுய தீர்த்தம்
புரைமெனினு மைந்தெழுத்தும் பொருந்தத் தீட்டித்
தேவியலெந் திரந்தாபித் துயர்வு சேற்றுந்
திருப்பஞ்சாக் கரதீர்த்தந் திகழு நல்லூர்ச்
சேவியல்சீர்ப் பெருமணம்வாழ் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (ரு)

மதுரேசர் வழிவழித்தொண் டுரிமை யாலோர்
வரகுணற்குச் சிவலிசியில் வயக்குந் தூய
விதமேவு சிவலோக மெண்பத் தெண்ணு
யிரர்மூழ்கி முன்னிறைஞ்சி யெழுமுன் னீந்தாங்
கதிமேன்மை விளக்குசிவ லோகத் யாக
ரமர்ந்தருளுஞ் சிவலோக மாகி நீடு
சிதமேவு பெருமணத்திற் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (சு)

திருக்கயிலை தனிற்பரனைப் பணிந்து கேட்பச்
சிவதலம்பற் பலவினுநாஞ் சிறந்து மேவி
யிருக்கையன வரதசாந் நித்ய வாசத்
திலங்குசிவ லோகமதே யேற்ற மென்றுங்
கருட்குமரன் புருந்தரனைப் பூசித் தென்று
மமர்நல்லூர்ப் பெருமணத்தி லகில மெல்லாந்
தெருட்பெருக வாழ்தருகா தலியார் நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (எ)

இரவிகுலம் பரவுமிரத் தினமாந் தாதா
வெனுமாந்தா தாவசிட்ட ரியம்பா நின்ற
விரவுசிவ தலமுழுதும் வரிசை யாக
விரவியவற் றளப்பரிய மேன்மைத் தென்றே
பொருவிறிருப் பணிமுழுதுந் திருவீ ழாவும்
புரிந்துதொழும் பெருமணச்சீர் புணர்நல் லூரிற்
றிருவருள்கூர் காதலியார் பாணி பற்றுந்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (அ)

முத்திவிழைஇக் காசிபுகூஉ நோற்ற காக
முனிக்கருள்வான் விசுவேசர் முன்பு தோன்றி
முத்திசிவ லோகமெளி தருளுங் கங்கை
மூழ்கியவ ணெழுகெனருண் முன்னி மூழ்கி
நத்தியெழுந் தெவ்வுயிருஞ் சிவமாத் தோன்று
நலங்கண்டு புவிதலையா னடந்து போற்றச்
சித்திதரு பெருமணத்திற் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (கூ)

காசிநகர் மூழ்குமுனி யீங்கெ ழுந்து
கண்ணுதலை வேண்டிடநங் கவுணி யச்சேய்
பேசருமோக் கந்தருமென் றுங்கு யோகிற்
பிறங்குசிவ லிங்கநிறீஇப் பேணல் கேட்டாங்
காசிலர சடுத்திறைஞ்சக் கோயில் செய்வித்
தமர்ந்திடவம் முத்திமணத் தருணல் லூரிற்
றேசுதிகழ் காதலியார் மகிழு நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (க0)

கங்கைவிசு வேசர்புகல் சீர்தேர்ந் தெய்திக்
கதிசெய்பெருக் கதிசயிப்பக் காட்டி யென்று
மிங்கமர்வா னருள்கெனவித் தேண்மா தத்தென்
றின்கிழமை தொறுமுறுதி யெனச்சார்ந் தோர்பாற்
கொங்கையன்றீர்த் தோற்சவங்கொண் டருளுங் கங்கா
கூபமேல் வீதியினிற் குலவு நல்லூர்த்
திங்கள்புரை திருமுகக்கா தலியார் நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (கக)

ஆருயிர்க்கு மலபாகஞ் செயத்தி ரோதை
யாயருள ருனேயென் பதனை யார்க்கு
நேருணர்த்தாங் கைந்தெழுத்தி னீர்தோய் வித்தொண்
ணீறளித்துச் சேயரையு நிறைசெஞ் சோதிச்
சேரும்வகை யருள்வெண்ணீற் றுமையெம் மன்னை
சிவலோகத் தியாகேசர் சிறந்து வாழுந்
தேருலவு பெருமணம்வாழ் பிரியை நாதர்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (கஉ)

திருவெண்ணீற் றுமைநாத ரருள்கள் வாழத்
திருத்தொண்டர் வேதசிவா கமங்கள் வாழத்
திருவருட்பா மெய்கண்ட நூல்கள் வாழத்
திருநீறு கண்டிகையைந் தெழுத்தும் வாழத்
திருமணச்செம் பொற்கோயில் சிறந்து வாழத்
திருநல்லூர்ப் பெருமணமாஞ் சீரூர் வாழத்
திருமணக்கா தலியார்கைப் பற்றி வாழுந்
திருஞான சம்பந்த ராடீ ரூசல். (கா

ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் திருவூசல்

முற்றுப்பெற்றது.